


# ஸப்தகிரி

ஏப்ரல், 1984

விலை ரூ. 1/-



திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்




ராமா தஸரத ராமா நிஜ ஸத்ய
3 2
காமா நமோ நமோ காகுத்ஸ ராமா

கருணாநிதி ராமா கௌஸல்யா நந்தன ராமா
4 3
பரம புருஷ ஸீதாபதி ராமா
ஸரதி பந்தன ராமா ஸவன ரக்ஷக ராமா
4 4
குருதர ரவிவம்ஸ கோதண்ட ராமா
3 3 3

தனுஜ ஹரண ராமா தஸரத ஸுதராமா
3 3 2
வினுதாமர ஸ்தோத்ர விஜயராமா

மனுஜாவதாரா ராமா மஹனீய குணராமா
3
அனிலஜ ப்ரிய ராமா அயோத்ய ராமா
4

ஸுலலித யஸராமா ஸுக்ரீவ வரதராம
3 3
கலுஷ ராவண பயங்கர ராமா
4
விலஸித ரகுராமா வேத கோசர ராமா
3
கவித ப்ரதாப ஸ்ரீ வேங்கடகிரி ராமா.
3

இப்பாடலுக்கான பண் 48-ம் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளது.




தனிப்பிரதி ரூ. 1

வருடச சந்தா ரூ. 12



*சிறப்பாசிரியர் :*

திரு. ஜி. குமாரசுவாமி ரெட்டி I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர்*

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்*

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

*அச்சிடுபவர்:*

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

THE WELFARE OFFICER
Publication Section, T.T.D
K. T. Road,
TIRUPATI.



# ஏப்ரல், 1984

மலா 14
இதழ் 11


## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

| | | |
|---|---|---|
| முகப்பில | : | திருமலையில் ஸ்ரீ ராம நவமியின்போது. |
| இரண்டாவது | : | திருப்பதி ஸ்ரீகோதண்டராம சுவாமி கோயில் (திருததேர். |
| பின்னட்டையில் : | | வசநத லக்ஷ்மி. |
| மூன்றாவது | . | நாகலாபுரம் ஸ்ரீ வேத நாராயண சுவாமி கோயில் கருடசேவை. |

*குறிப்பு : இக்கட்டுரையின் இறுதிப் பகுதி அடுத்த இதழில் வெளிவரும்.

# உங்களுடன்....

''யுகங்கள் மாறினாலும் தர்மங்கள் மாறுவதில்லை. இவ்வுண்மையைக் கூறும் சொற்கள் காலத்தாலும் அழிவதில்லை'' எனும் பெருண்மைக்குச் சான்றாக, என்றோ எழுந்த காவியங்களும் நூல்களும் இன்றும் நம்மிடையே படிக்கப்பட்டும் பேசப்பட்டும் வருகின்றன. இவ்வகையில் இந்து சமயத்தின் இரு கண்களெனப் போற்றப்படும் இராமாயணமும் மகா பாரதமும் நமக்குக் கூறும் படிப்பினைகள் பல. இவற்றுள் ஆதிகாவியமான இராமாயணம் ஒவ்வொரு இந்துவின் உள்ளத்திலும் ஒன்றிவிட்ட ஓர் அதி அற்புதமான படைப்பாகும். நவில் தோறும் பயில் தோறும் புத்தம் புதிய கருத்துக்களை அள்ளித் தந்திடும் அருமைப் பெட்டகமது. மொழி, இன, இட, வயது பேதமின்றி எல்லோருக்கும் எக்காலத்தும் செவிக்கும் அறிவுக்கும் ஓர் இன்ப ஊற்றாக அமையும் அக்காவியத்தின் சிறப்புதான் என்ன?

செங்கதிர் விரிந்தது முதல் பின்னர் அது மறைவது வரை, ஏன் அதன் பின்னரும், மனிதன் மேற்கொள்ளும் மற்றும் எதிர்ப்படும் பிரச்சனைகள் ஏராளம். அவை அவனால் தீர்க்கப்படாவிட்டாலும், அவன் அவற்றை மேலும் கடுமையாக்கி, பின்னர் தானே ஒரு பிரச்சனையாகும் அவலத்தையும் நாம் காணலாம். ஏன் இந்த நிலைமை? யார் இதற்குப் பொறுப்பு? தன் மாறுதலுக்கு இச்சமூகம்தான் காரணம் என்று கூறித் தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்டு, தான் தனது என்ற தன்னலப் பேய் வசப்பட்டு, பொறாமை, பொறுமையின்மை, கோபம், கபடு, உழைப்பின்மை, நேர்மையின்மை போன்ற கருங்குணங்களுக்குப் பலியாகிக் கொண்டதே கோலம் கண்டதே காட்சியெனத் திரிந்து, உணவுக்கும் உடைக்கும் மட்டுமே முக்கியத்துவம் தந்து, தன் மனிதப் பிறவியின் புனித நோக்கத்தை மறந்து வாழ்ந்து கொண்டிருக்கும் இன்றைய இந்தியனுக்கு அவசியம் ஒரு சிறந்த வழிகாட்டி. எத்தனை சமயத் தலைவர்களும், சமய ஞானிகளும் இருந்தாலும், தோன்றினாலும், அவர்களால் மனிதனுக்கு 'இதுதான் வழி' என்று காட்ட முடியுமே தவிர அவ்வழியின் இலக்குக்கு அழைத்துச் செல்ல முடியாது. அந்த அடைய அவன் ஒருவனே முயற்சித்தல் வேண்டும். அதற்கு அவன் தன்னைத் தானே அறிதல் அவசியம். அதற்குத்தான் தோன்றின சமயத் தத்துவங்கள், புராணங்கள், இலக்கியங்கள் போன்றன.

சாதாரணமாகக் கதை கேட்பதில் அதிகம் ஆர்வம் கொண்டிருக்கும் மனிதனுக்கு அறிவுத் தீனியாக ஒரு பெருங் கதையினையும், பல கிளைக் கதைகளையும் கொண்ட இராகவ காவியமும், அதில் வரும் கதை மாந்தர்களும் பல தத்துவார்த்த இரகசியங்களைக் கொண்டு விளங்குகின்றன. தசாவதாரங்களில் அதிக அளவு நம்மை ஈர்க்கும் அவதாரம் இராமாவதாரம். இவ்ராமனை நாயகனாகக் கொண்ட இராமாயணத்தில் இராமன் மட்டுமன்றி, அவற்றில் பல பாத்திரங்கள் நாயகத் தகுதி கொண்ட, ஏன் இன்னும் கூறப்புகின், இராமன் நாயகனாக அழைக்கப்படுவதற்கே காரணமான பாத்திரங்கள் பலவும் உள்ளன. வான்மீகியும், கம்பனும் இராமனை இறையவதாரமாகப் பல இடங்களில் நேரிடையாகவோ மறைமுகமாகவோ கூறினாலும், இராமன் மட்டும் ஒரு சாதாரண மனிதனாகவே காவியம் முழுவதும் விளங்கி, பலவகை பிரச்சனைகளுடன் தன்னைப் பிணைத்துக் கொண்டு சிறந்த தலைவனாக, மகனாக, கணவனாக, சகோதரனாக, நண்பனாக விளங்கி அவ்வுறவுகளுக்கு ஓர் இலக்கணமாகவும் இலக்கியமாகவும் திகழும் அவனே இன்றைய இளந்தலை முறையினர்க்குச் சிறந்த வழிகாட்டி. தன்னைப் பற்றியே கவலைப்படாத ஒருவன் தன்னைப் பெற்ற தாய் தந்தைக்காகவா கவலைப்படுவான் என எழும் கேள்விக்கு முன் நிற்கும் இன்றைய இளைஞனுக்கும், தன் தந்தையின் சொல்லைக் காப்பாற்றுவதற்காகவே அரசு துறந்து அடவி சென்ற இராமனுக்கும்—வாய்ப்பும் வசதியும் அமையுமாயின் மேலும் இரண்டு பேரை மணந்து கொள்ள நினைக்கும் இன்றைய மனிதனுக்கெதிரில், அறுபதினாயிரம் மனைவிமார்களைக் கொண்ட தசரதனுக்கு மகனாகப் பிறந்தாலும் 'ஒருவனுக்கு ஒருத்தி' எனும் கொள்கையினைக் கொண்டவனாக, அன்றே ஒரு புரட்சி இல்லறத்தானாக விளங்கிய இராமனுக்கும் - உள்ள தூரத்தை, ஓரளவாவது இராமகாவியம் குறைக்காதா என்ற நப்பாசையில்தான் இராமனின் புகழ் ஆண்டுக்கொருமுறை தேசிய அளவில் கொண்டாடப்படுகிறது.

இவற்றையெல்லாம் விட 'ஆவதும் பெண்ணாலே, அழிவதும் பெண்ணாலே' எனும் முதுமொழி ஏற்படும் அளவிற்கு ஒரு பெண்ணின் அதுவும் இந்தியப் பெண்ணின் பங்கு இச்சமுதாயத்தில் பெரிதும் பேசப்பெறுகின்றது. தூக்கத்தில் அருகு உள்ள கணவன் தும்மினாலும் தன் தூக்கம் கலைந்து விடுகிறது என்று அலட்டிக் கொள்ளும் இன்றைய பெண்ணிற்கும், தடுத்தாலும் உடன் வருவேன் என்று, கொண்டவனுடன் கொடிய காட்டிற்கு உடனே சென்ற சீதைக்கும் உள்ள கால இடைவெளிக்குக் காரணம் என்ன? அரண்மனை வாசத்தை விட்டு மரவுரி உடுத்தி, காய்கனி உண்டு கணவனுக்குப் பணிவிடை செய்த சீதைக்கும், 'கொலையும் செய்வாள் பத்தினி' எனும் சொற்றொடர் எழும்படிக்கு இன்றைய பாரதப் பெண்மணி விளங்குவதற்குக் காரணம் என்ன? 'என்ன' என்பதைவிட 'யார்' எனக் கேட்டால் அது நம்மைச் சிந்திக்க வைக்கும். பொறுமையின் இருப்பிடமாக, கருணையின் பிறப்பிடமாக திகழ்ந்த சீதை அரண்மனை அரசியல் காரணங்களுக்காகக் காட்டிற்குச் சென்றாள். அசோகவனத்தில் மாற்றான் தகாது பேசினாலும் வாளா இருந்தாள். சிறை மீண்ட பிறகும், இச்சமுதாயத்திற்காகத் தன் கணவன் கூறியபடி தீக்குளித்தாள். அது மட்டுமா? கருவுற்றிருந்த சமயத்திலும் தனித்து காட்டில் விடப்பட்டாள். ஏன்? தன் பொறுமையின் பெருமையையும், தன் கணவனின் பெருமையையும் காட்டத்தான். ஆனால் தன் பொறுமை அளவுக்கு மீறி சோதிக்கப்பட்டபோது, இராவணன் மட்டுமன்றி, அவன் குலமே அழிய காரணமாகத் திகழ்ந்தாள். ஆகவே ஒரு பெண் பெண்ணாகத் திகழ்வதோ அல்லது காளியாக மாறுவதோ, இச்சமுதாயத்தில் முக்கிய பங்கு வகிக்கும் ஆண் வர்க்கத்தினர் மீதே ஆதாரப்பட்டுள்ளது.

இலக்கியச் சுவையுடன், வாழ்க்கை இலக்கணத்தைக் கொண்டு விளங்கும் இராமாயணத்தை என்றோ நடந்து முடிந்துவிட்ட ஒரு பெருங்கதை என்று கருதாமல், அது நம்மை மனிதனாக வாழ வகைசெய்யும். பெருமைமிகு ஒரு சமுதாய மறுமலர்ச்சியினைத் தோற்றுவிக்கும் ஓர் உன்னதமான காவியமாகக் கொண்டு, அது தரும் பாடங்களையும் போதனைகளையும் சற்றே செவி மடுத்தால், எதிர்வரும் 'ரக்தாக்ஷி' வருடம், நமக்கு அபயம் தரும் 'ரக்ஷாக்ஷி'யாக விளங்கும்.

# செய்திச் சுருக்கம்

ஆந்திர மாநிலத்தில் குண்டக்கல், மஞ்சிரியால், ஜில்லேலமுடி ஆகிய இடங்களில் ரூ. 7 இலட்சம் (ஒவ்வொன்றும்) செலவில் தி. தி. தேவஸ்தான திருமண மண்டபங்களைக் கட்டுவதென்று மேலாண்மை முடிவு செய்துள்ளது.

## வைர கிரீடம் :

திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் மூலவருக்கு வைர கிரீடம் ஒன்று செய்வதென்று தி. தி. தே. மேலாண்மை பல மாதங்களுக்கு முன்பே முடிவு ஒன்று எடுத்திருந்தது. இதற்கான பல விலைமதிப்புள்ள வைரங்கள் பெல்ஜியத்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்டுள்ளன. இவ்வைர கிரீடம செய்வதற்கென நாட்டிலுள்ள இது சம்பந்தப்பட்ட தனியார் நகை வியாபாரிகளிடமிருந்து ஒப்பந்த இசைவுகள் அழைக்கப்பட்டதின் பேரில் நான்கு நபர்களே முன்வர, அதில் ஒருவரே இத்துறையில் பிரபலமாக விளங்கியுள்ளார். அவரும், இப்பணியை இலவசமாகவே திருப்பதியில் செய்து தர முன் வந்துள்ளார் எனினும் தி. தி. தேவஸ்தான மேலாண்மையால் அமைககப்பட்டுள்ள துறை வல்லுநர்கள் அடங்கிய குழுவின் ஆலோசனைப்படி இப்பணி தகுந்தவரிடம் ஒப்படைக்கப்படும். அதற்கு முன், ஒப்பநத இசைவுகள் தநதுள்ள நபர்களின் பணி நுட்பத்தினை அறிந்திடும் வகையில், அவர்களிடமிருந்து மாதிரி கிரீடமும், பத்மாவதி தாயாருக்கான அபய ஹஸ்தமும் பெறப்பட்டு, பின்னரே இப்பணி துவங்கும். இதனால் மேலும் சில காலம் ஆகும் எனக் கருதப்படுகிறது.

## ஸ்ரீ ஜகத்குரு ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் :

அண்மையில் ஆந்திர மாநிலத்தில் புலிசெர்லா எனும் இடத்தில் தி. தி. தேவஸ்தான மேலாணமைக் குழு உறுப்பினர்கள் காஞ்சி காம கோடி பீடம் ஸ்ரீ ஜகத்குரு ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளை சந்தித்து, சுவாமிகளின் இந்து சமயத்தின் மேம்பாட்டிற்கான அறிவுரைகளைக் கேட்டறிந்தனர். இதுபோது சுவாமிகள், நாட்டிலுள்ள மிகப் பழமையான கோயில்களைப் புதுப்பித்தல் அவசியத்தையும், பழங்குடி மக்கள வசிக்கும் இடங்களில் வழிபாட்டு அரங்குகள் கட்ட வேண்டியதன் முக்கியத்துவத்தையும் விளக்கினர். தொடர்ந்து கூறுகையில், இந்து தர்மத்தின் பெருமைகளை விளக்கி, அவற்றினைப் பரப்பிடும் வகையில் மூன்று ஆன்மிக மையங்களை ஆநதிராவில் பரிட்சார்த்தமாகத் தொடங்க வேண்டும் என்று குறிப்பிட்டார். பெண்களை ஆன்மீகத் துறையில் மேலும் ஊக்கிடும் வகையில், விளக்கு பூஜைகளை அவர்களிடம் பிரபலபடுத்தவேண்டும் என்று கூறினர். மேலும், மருத்துவ மனைகளிலும், சிறைகளிலும் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் பிரஸாதங்களை அனுப்பி அவற்றை விநியோகிக்க தேவஸ்தானம் வழி முறைகளை மேற்கொளள வேண்டும் என்றும் கூறினர். மேற்கூறிய சுவாமிகளின் ஆலோசனைகளை, முயன்ற அளவு செயற்படுத்திட, தேவஸ்தானம் முழு முயற்சியினை மேற்கொள்ளும் என்று தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எம். குமாரசுவாமி ரெட்டி அவர்கள் உறுதி அளித்தார்.



## வாழ்த்துக்கள்

'ஸப்தகிரி' வாசகர்களுக்கும், கட்டுரையாசிரியர்களுக்கும், விற்பனைப் பிரதிநிதிகளுக்கும் எங்களுடைய உளங்கனிந்த 'தமிழ்ப் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்' பல உரித்தாகுக.

—ஆசிரியர்.

## அறிவிப்பு

திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலில் சிறப்பு நுழைவு தரிசனத்திற்கான ரூ. 25/- விதம் (நபர் ஒருவர்க்கு) விற்கப்படும் சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட்டுகள் நாட்டிலுள்ள ஆந்திரா வங்கி கிளைகளிலும், தி. தி. தே. தகவலறிவிப்பு நிலைய மேலாளர்களிடமும் விற்பனைக்குக் கிடைக்கும்.

# ப்ரபத்தி

திரு. எம்பார். வி. ரங்காச்சாரி
சீர்காழி.

பரமபதம் என்கிற வீடு பேறு பெறுதற்குப் பல வழிகள் உண்டு. அவ்வழிகளுள் பக்தி, ப்ரபத்தி என்னும் வழிகள் மிகச் சிறந்தவை. இவ்விரு வழிகளுள் பக்தியிலும் ப்ரபத்தி மிகச் சிறந்தது. இதற்குப் பல காரணங்கள உண்டு. ஒரு காரணத்தைக் காணபோம்.



ஸம்ஸாரி சேதனன் நெடுகின காலத்தில் அறிநதும், அறியாமலும், செயது, செய்து சேமித்து வைத்திருககும் புண்ணிய பாவங்கள் ஸஞ்சித கருமம் எனப்படும. அநத ஸஞ்சித கருமஙகளுள், பயனேததர ஸித்தமாயிருக்கும் கருமஙகளுககுப் பிராரப்தம் என்று பெயர். பகதியை மேற்கொண்டுளளவன், அப்பிராரபத கருமங்களேப் பல ஜனமங்களில அனுபவிதது, பின்புதான் வீடு பேறு பெற இயலும். ப்ரபத்தியைச் செய்தவனே, ஆர்த்தியுடையனுயிருப்பின், அப்போதே சிந்தயநதீ என்னும் கோப கன்னியைப் போன்று வீடு பேறு பெற்று விடலாம். ஆர்த்தியில்லேயேல் சரீரம் போன உடன் வீடு பேறு பெறுவதில் ஐயம் ஒன்றும் இல்லே.

இவ்வுண்மையை, பக்தி செய்பவனுக்கு விளமபம உணடு. ப்ரபத்தியைச் செய்பவனுக்கு விளமபம் இல்லே என்று ஆன்ருேர் கூறுவர். ப்ரபத்தியைச் செய்தவன் ப்ரபத்தியைச் செய்த பிறகு புத்தி அறிந்து பாவங்களேச் செயய மாட்டான். கவனமின்மையினுல் செய்ய நேரிட்டால் 'அந்த பாவங்களை தாமரை இலேயில் நீர் போன்று அப்பிரபந்தனேச் சாரா' என்னும் உண்மையும் இங்கு அறியத் தககது. ப்ரபததியைச் செய்தவன், புத்தி அறிநது பாவங்களேச செய்கிருன் எனறு வைத்துக கொள்வோம். அவன் கதி எனன? எனனில், முனனம் செய்த ப்ரபத்தியை நினேத்துக் கொணடால் அங்ஙனம் புத்தி அறிந்து செய்யும் பாவங்களும் தொலேந்துவிடும். முன்னம் செய்த ப்ரபத்தியை நினேத்துக் கொள்ளவில்லே; அவன் கதி என்ன? என்னில், எம்பெருமான்! அந்த ஜன்மத்திலேயே லகுவாக அவனே சிக்ஷித்து சரீரம் போனதும் தன் திருவடிகளில் சேர்த்துக் கொள்கிருன் என்னும் உண்மையும் இங்கு உணரத தக்கது. இது மாத்திரமும அன்று. பக்தியைச் செய்தவனுக்கு அவனுக்கு மட்டுமே வீடு பேறு உணடு. இது போன்று 'ப்ரபத்தியை செய்தவனுககு மாத திரம் பாவங்கள் நீங்கும. வீடு பேறு பெறலாம்' என்பது இலலே. ஆனுல் 'ப்ரபத்தியைச் செய்தவன் அவனேடு தொடர்புள்ளவன், தொடர்புளளவனேடு தொடர்புற்றவன் எல்லாருக்கும் பாவங்கள் நீங்கி விடும்; வீடு பேறு பெறலாகும்' என்னும் இச் சிறப்பு இங்கு அவசியம் அறியத் தக்கது.

எம்பெருமானுகிற தருமத்தில் ஸமபந்தம் பெறறிருந்தால், அத் தருமப் பிரபாவம் ஸம்பந்த ஸம்பந்தம் உள்ள இடமெங்கும ஏறிப் பாய்ந்து வெள்ளமிடும் என்பது வெள்ளிடை மலே.

இங்கு,

"வைஷ்ணவோ ந: குலே ஜாத:
ஸநஸ ஸநதார யிஷ்யதி" என்னும வசனமும்,

"கேசவன்தமர் கீழமேல் எமரேழ எழு
பிறப்பும
மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு
வாய்க்கின்றவா"

'பிடித்தார் பிடிததார் வீற்றிருந்து பெரிய வானுள நிலாவுவரே' என்னும் நமமாழ்வார் திருவாக்குகளும் அநுஸந்திக்கத தக்கவை.

ப்ரபத்திக்குள்ள சிறப்பை உதாரணத்தோடு அனுபவிக்க விபீஷணன் வரலாற்றைக காணபோம்.

'ப்ரதியதாம் தாசரதாய மைதிலீ' 'யாவநந க்ருஷ்ணந்தி சிராம்ஸி பாணு:' இராமபிரானிடம் ஸீதையைச் சேர்த்து விடு; அவ்வாறு செய்யாமல் போனுல், உனக்கு மாத்திரம் அழிவு இல்லே; அரக்கர் அனேவரும் அழிந்து விடுவர்.' என்னும் நல் வார்த்தையை விபீஷணன் இராவண

னுக்குச் சொன்னான். அவ்வார்த்தையை இராவணன் செவி தாழ்த்திக் கேட்கவில்லை. அது மாத்திரமன்று; குலத்தைக்கெடுக்க வந்த கோடாரிக் காம்பு என்று நிந்தையையும் செய்தனன்.

அப்போது விபீஷணன் இராவணனையும், இலங்கையையும், பெண்டிர் மக்கள் முதலானோரையும் விட்டிட்டு, கதையைக் கையில் எடுத்து, நான்கு அரக்கருடன் இராமபிரானைக் கிட்டி, சரணம் பற்றினன். ஸுக்ரீவன் இராமபிரானிடம் தனக்குள்ள அன்பினால், மிகக்கலங்கி விபீஷணனையும் உடன் வந்த அரக்கர் நால்வரையும் வதம் செய்ய வேணும் என இராமபிரானிடம் வேண்டிக் கொண்டனன். இராமபிரானோ அவ்வேண்டுகோளுக்கு இணங்காமல், நல்வார்த்தைகளைக் கூறி, ஸுக்ரீவனைத் தெளிவித்து, விபீஷணனையும், உடன்வந்த அரக்கர் நால்வரையும் அந்த ஸுக்ரீவன் மூலமாயே ஏற்றுக்கொண்டனன். விபீஷணனும் அரக்கர் நால்வரும் வாழ்வுற்றனர். இதுவே இங்கு அவசியம் அறியத்தக்க விபீஷணன் வரலாறாகும். இராமாயணத்தில் மேற்கூறிய விபீஷணன் வரலாற்றைக் கூறுமிடத்து விபீஷணன் மாத்திரம் முறையோடு இராமபிரானிடம் சரணாகதி செய்ததாய்க் கூறப் பெற்றிருக்கிறதேயன்றி, உடன் வந்த அரக்கர் நால்வரும் சரணாகதி செய்ததாய்க் கூறப் பெற்றிலது. இராமபிரான் திருவடிகளில் கைங்கர்ய செல்வத்தையோ விபீஷணன் மாத்திரம் பெற்றதாக இல்லாமல், உடன் வந்த நால்வரும் பெற்று வாழ்ந்ததாகத் தெரிகின்றது.

ஆகவே 'சரணாகதியைச் செய்தவற்கு மாத்திரம் நன்மை என்பது இல்லை; சரணாகதியைச் செய்தவனோடு, தொடர்புற்றவருக்கும் நன்மை உண்டு' என்னும் உண்மை நன்கு விளங்குகின்றது.

இதனால் பக்தியைக் காட்டிலும் ப்ரபத்திக்குள்ள சிறப்பு நன்கு விளங்கும். ப்ரபத்தியைப் பற்றிய இவ்வுண்மையையும், இது போன்று உள்ள பல உண்மைகளையும் பாஞ்சராத்திர சாஸ்திரங்களில் நாம் நன்கு அறியலாகும்.

மேற்கூறிய ப்ரபத்தியின் சிறப்பைக் கூறும் பாஞ்சராத்திர வசனம் பின்வருமாறு:

'' அனயதாபிச ஏகஸ்ய ஸம்யங்ந்யஸ
தாத்மநோஹரௌ
ஸர்வ ஏவ ப்ரமுச்யோந்தரா: பூர்வே
பரே ததா'

''பரம புருஷன் பால், தன்னுடையவும், தன்னைச் சேர்ந்தாருடையவும், இரக்ஷண. பரத்தை வைத்தவனுடைய தொடர்பினால் அவனுக்கு மாத்திரம் வீடு பேறு என்பதில்லாமல், அவனோடு தொடர்புள்ள முன்புள்ளார்க்கும், பின்புள்ளாருக்கும் வீடு பேறு உண்டாம்'' என்பது மேற்கூறிய பாரத்வாஜ ஸம்ஹிதா வசனத்தின் கருத்தாகும்.

ஒருவன் எம்பெருமான் ஸந்நிதியில், ''நான் பாபக்கடல்; வீடு பேறு பெற எனக்குச் சிறிதும் புண்ணியம் இல்லை; எனக்கு வேறு இரக்ஷகரும் இல்லை; நீயே உபாயமாக வேணும்'' என வேண்டிக் கொள்ளும் வேண்டுதல்தான் ப்ரபத்தி. இவ்வாறு தானே பாஞ்சராத்திரம் ''அஹம் அஸ்மி அபராதாநாம் ஆலய: அகிஞ்சநோऽகதி: த்வமேவ உபாய பூதோமே பவ இதி ப்ரார்த்தநா மதி: சரணாகதி:'' என்று கூறியிருக்கிறது.

சரணாகதி என்னுமிடத்தில் ''எம்பெருமான்தான் எம்பெருமானைப் பெற உபாயம். ஆனாலும் எம்பெருமானாகிற உபாயம் எப்போதும் இருக்கின்றமையின் (ஸித்தமாயிருக்கின்றமையின்) அனைவர்க்கும் வீடு பேறு உண்டாகட்டும்'' என்னும் கேள்வி ஏற்படக் கூடும். அக்கேள்வி உண்டாகாமைக்காக எவன் எம்பெருமானை உபாயமாகப் பற்றுகின்றானோ, (உணருகின்றானோ) அவனுக்கு எம்பெருமானாகிற உபாயம் காரியம் செய்யும்; எவன் எம்பெருமானை உபாயமாகப் பற்றவில்லையோ, அவனுக்கு எம்பெருமானாகிற உபாயம் காரியம் செய்யாது. ஆகவே எம்பெருமானையே உபாயமாகப் பற்றுதல் இன்றியமையாததாகும். இவ்வாறு பாஞ்சராத்திர சாஸ்திரத்தில் எம்பெருமான் என்னும் தருமத்தைப் பற்றியிருப்பாருக்கு மாத்திரம் பலன் என்பது இல்லை. தொடர்புற்றவர்க்கும் பயன் உண்டு என்னும் ப்ரபத்தியின் பெருமையை அறிதல் அவசியமாகும். ★



ஸ்ரீவீர கோதண்டராம சுவாமி-தில்லைவிளாகம்-என். ராமகிருஷ்ணா-மயிலாடுதுறை.

# கண்டேன்! கடைத்தேறினேன்!!

இராம லக்ஷ்மணர்கள் கோதாவரிக் கரையிலுள்ள பஞ்சவடிக்கு வந்து சேர்ந்தார்கள்.

அங்குதான் சீதையை இராவணன் அபகரித்துச் சென்றான். வரும் வழியில் சடாயுக்கு கதி மோக்ஷமளித்து விட்டு நேராக இருவரும் சபரியின் ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

சபரி பூர்வ ஜன்மத்தில் அரசியாக இருந்தவள். அப்பொழுது அவள் பணத்தினால் பெரியவர்களுக்குத் தொண்டு செய்தாளே தவிர மனத்தினால், உடலினால் சிறிதும் பணிவிடை செய்யவில்லை.

ஒரு தடவை அவள் பிரயாகை சென்றிருந்தாள். அங்கே பல மகான்களைத் தரிசித்தாள். "மறுபிறப்பில் தான் மகான்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும்" எனக்கோரி திரிவேணியில் அவள் உடலை நீத்தாள்.

மறு பிறப்பில் ஒரு மலைஜாதிக் கன்னியாகப் பிறந்தாள்.

சபரி பரிபூரண அன்பு வடிவானவள்; பக்தியின் சொரூபம்.

சபரியின் திருமண நாள் வந்தது. மகள் திருமணத்திற்கு, தந்தை, திருமணத்திற்கு வருபவர்களுக்கு விருந்தளிக்க இரண்டு ஆடுகளைக் கொண்டு வந்து வீட்டில் கட்டிவைத்திருந்தார்.

சபரி இரண்டு ஆடுகளையும் விருந்திற்காகப் பலி கொடுப்பதை அறிந்து பயந்தே போய் விட்டாள்

"என் திருமணத்திற்கு இந்த மாதிரி பிராணி வதையா? திருமணத்தில் உயிரைக் கொன்று விருந்திட வேண்டுமா? மங்களப் பந்தலில் கொலை செய்வதா? இது கூடவே கூடாது" எனக்கூறி அவள் நள்ளிரவில் யாருக்கும் தெரியாமல் வீட்டை விட்டு வெளியேறி விட்டாள். பின், பாம்பாசரோவரம் என்ற ஏரியின் கரையிலுள்ள மதங்க ரிஷியின் ஆசிரமத்திற்குப் பக்கத்தில் வசிக்கலானாள்.



சபரி பகலில் பக்கத்திலிருந்த பெரிய மரத்தின் கிளைமீது ஏறி உட்கார்ந்திருப்பாள். இரவு நேரங்களில் யாருக்கும் தெரியாமல் மகான்களுக்குப் பணிவிடை செய்து வருவாள்.

"நல்ல காரியங்கள் செய்தாலும் விளம்பரப்படுத்திக் கொண்டால் அதன் புண்ணியம நசித்துப் போய் விடும்" என்பது சபரியின் கருத்து.

---

திரு. அத்தியப்பன்-பாச்சல்.

---

பிறருக்குக் காட்டவோ, வெளி ஆடம்பரத்திற்குகோ தொண்டு புரியக் கூடாது என்பது சபரியின் கொள்கை. பகவானை திருப்தி செய்யும் காரியத்தில் பலரும் தெரியும்படி செய்ய வேண்டியதில்லை என்பதும் அவள் எண்ணம்.

முனிவர்கள் எந்த வழியாக குளிக்கப் போவார்களோ, அந்த வழியை இரவு நேரங்களில் யாரும் பார்ப்பதற்கிலலாமல துடைப்பத்தினால் சுத்தம் செய்து வைத்து விடுவாள்

ஒரு நாள் மதங்க ரிஷி "நீ என்ன சாதியைச் சேர்ந்தவள்" எனக் கேட்டார்.

அவள் "நான் ஒரு வேடனின் புதல்வி" என உண்மையைக் கூறினாள்.

இவள் பிறவியில் கீழ் சாதியாக இருந்தாலும பண்பிலும் ஒழுக்கத்திலும் உயர்ந்தவளாக இருப்பதால்

அவளைத் தன் ஆசிரமத்திலே வைத்துக் கொண்டார்.

ஈனச் சாதிப் பெண்ணுக்கு மதங்கர் இடமளித்ததை அறிந்த மற்ற முனிவர்கள் அவரைப் பழித்தார்கள்.

மதங்கர் சபரியின் மேலான குணத்தைக் கண்டு அவளுக்கு 'இராம நாம' மந்திரத்தை உபதேசித்தார்.

பின்னர் மதங்கர் பிரம்மலோகம் போகத் தயாரானார்.

இதைக் கண்ட சபரி ''தாங்கள் மாத்திரம் போய்விட்டால் என் கதி என்னவாவது'' எனக் கலங்கினாள்.

'நான் உனக்கு இராம நாமத்தை உபதேசித்துள்ளேன். நீ அதை ஜபித்து வா, ஒரு நாள் உன் வீட்டிற்கு இராமன் கட்டாயம் வருவான்'' என ஆறுதல் கூறினார்.

தன் வீட்டிற்கு என்றைக்காவது ஒரு நாள் இராமன் கட்டாயம் வருவான்' என சபரி முழு நம்பிக்கையுடன் காட்டிலிருந்து இராமனுக்காக இலந்தைப் பழங்களைக் கொண்டு வந்து வைப்பாள். தினமும் மாலை வரை எதிர்பார்ப்பாள். வரவில்லையன்றால் அப்பழங்களைத் தானே புசித்து விடுவாள். நான் 'பாவியா? இராமன் ஏன் இன்னும் வரவில்லை' எனத் தன்னையே கேட்டுக் கொள்வாள்.

பல ஆண்டுகளாகி விட்டன. இராமன் சபரி வீட்டிற்கு வரக் காணோம். சபரியும் கிழவி ஆகிவிட்டாள். இராமனைக் காண, ஏங்கித் தவித்தாள். ஆனாலும் குருநாதர் கூறியபடி என்றாவது ஒரு நாள் இராமன் தன் இல்லம் தேடி வருவார் என்ற நம்பிக்கையை இழக்கவில்லை.

பல ஆண்டுகள் இராமன் வருகைக்காக இராம நாம ஜபம் செய்து வந்தாள். மனக் கட்டுப்பாட்டுடன் இருந்தாள். ''தான் பிறந்ததே பிறர் நன்மைக்குத்தான்'' என்ற எண்ணமுடன் வாழ்ந்து வந்தாள். தெய்வீக வாழ்வு வாழ்ந்தாள்.

ஒரு நாள் இராமன் இலக்ஷ்மணனுடன் அருகிலிருந்த நதிக் கரைக்கு வந்தார். முனிவர்கள் யாவரும்கூடி அவர்களை வரவேற்று தங்கள் தங்கள் இல்லத்திற்கு வருமாறு விரும்பி அழைத்தார்கள்.

இராமன் சபரியின் குடிசைக்கே போவதாகத் தெரிவித்தான், 'என்னை எப்போதும் தேடிக் கொண்டிருப்பவர்களை நானே அவர்களைத் தேடிக் கொண்டு போவேன்' என்றான் இராமன்.

இராமன் இலக்ஷ்மணன் இருவரும் சபரியின் குடிசைக்குள் நுழைகிறார்கள். சபரி அப்போது 'இராம நாம' ஜபம் செய்து கொண்டிருந்தாள்.

இராமனைப் பார்த்ததும் பரபரபபுடன் மகிழ்ந்து தக்க ஆசனம் கொடுத்து அமரச் வைத்தாள், 'நான் தாழ்ந்த சாதி வகுப்புப் பெண். நான் உங்களைச் சரணடைகின்றேன்', என்றாள்.

சபரி இராமனுக்கு இலந்தைப் பழங்களை கொண்டு வந்து வைத்தாள். ஒவ்வொரு பழத்தையும் கடித்து ருசி பார்த்து இராமனுக்குக் கொடுத்தாள். அன்பின் மிகுதியால் எச்சில் என்ற எண்ணமே சபரிக்கு எழவில்லை.

இராமன் சபரியின் இலந்தைப் பழங்களை உண்டு மிகவும் பாராட்டினான். இன்பமெல்லாம் அன்பில் தானே அடங்கி உள்ளது.

சபரியின் வாழ்க்கை மனித குலத்துக்கே ஓர் எடுத்துக் காட்டாகும். நலிந்தவர்களுக்கும் ஆறுதலளிக்கும் பகவான கட்டாயம் தரிசன மளிப்பார்.

உனக்கு ஏதாவது விருப்பம் உண்டா? என இராமன் சபரியைக் கேட்க,

'இந்த பம்பா ஏரித் தண்ணீர் கெட்டுப் போயுள்ளது. அதைச் சீர்படுத்துங்கள்' என்றாள். (ஒரு நாள் ஒரு ரிஷி சபரியைக் காலால் உதைத்துத் தள்ளிவிட்டார், அன்று முதல் அந்த ஏரித் தணணீர் கெட்டு விட்டது. அதைப் புனிதமாக்கவே இராமனை வேண்டினாள்.)

''சபரி நீயா என்னை இதற்கு நாடுவது? அதற்கு நான் தகுதி இல்லை. ரிஷிகளே! நீங்கள் சபரியின் பாதத்தைக் கழுவிய நீரை ஏரி நீருடன் கலந்து விடுங்கள்'' என்றான்.

உடனே சபரி அந்த கெட்ட நீருள்ள ஏரிக்குப் போய் நீராடினாள். உடனே அந்த ஏரித் தண்ணீர் பூராவும் நல்ல தண்ணீராவும, இனிப்பாகவும் மாறிவிட்டது.

தவமிருந்து சபரி இராமனைக் கண்டாள். கண்டதும் கடைத்தேறினாள். யோக சமாதியில் அடங்கிவிட்டாள். ஸ்ரீ இராமபிரானை சிந்தனை செய்து கொணடு இறக்கும் யோகிகளுக்கு நற்கதி கிடைக்கும் போது ஸ்ரீ இராம பிரானை நேருக்கு நேர் தரிசனம் செய்கிறவர்களுக்கு நற்கதி கிடைப்பதில் என்ன சந்தேகம்?

ஜீவனுக்கு பகவானுடன நட்பு ஏற்படாத வரையில் ஜீவன் நற்பலனடைய முடியாது. ஜீவன் கணக்குப் பார்த்தே தானம் செய்கின்றான். பகவான் தனக்கென கொஞ்சம் வைத்துக் கொண்டு மீதியை ஜீவனுக்குக் கொடுப்பதில்லை. காம வாசனைகளை விட்டவனே பகவானிடம் நட்பு கொள்ள முடியும்.

பாவத்தைப் போக்குவது 'இராம' நாமம். புண்ணியவானுக்கும் ஆண்டவனை நினைக்க உரிமையுண்டு. ஏனென்றால் அவன் புண்ணியம் செய்தவன். பாவிக்கும் ஆண்டவனை நினைக்க உரிமையுணடு. ஏனென்றால் அவன் தன் பாவத்தைப் போக்கிக் கொள்ள விரும்புகின்றான். 'இராம நாமம்' அனைவருக்கும் பொதுச் சொத்து. 'இராம நாமம்' அமுதத்தைவிட சிறந்தது. அது உலக நோய்களுக்கெல்லாம் அருமருந்தாகும். இந்த அருமருந்தை அருந்த எந்த விதமான பத்தியமும் கிடையாது. ★

இதுகாறும் உலகில் தோன்றிய காவியங்கள் பலவாகும். அவற்றுள் ஒன்றே கம்பனின் இராமாயணம். இராமகாதையை மலர் எனனும் கவிதைகளால் மாலையாகத் தொடுத்து தமிழ் அன்னையை அழகு செய்த பெருமை கம்பனையே சாரும். கம்பனது கவிதைகளிலே கருத்துக் கருவூலங்கள் மிகுந்துக் கிடக்கும் அச்சம், மடம், நாணம், பயிர்பபு ஆகிய பெணகளுக்குரிய குணங்களையும், அஞ்சாமை, வீரம், பிறன மனை நோக்கா பேராண்மை, கருணை, அருள் உள்ளம் போன்ற ஆண்களுககுரிய குணங்களையும், அன்பு, அறம், நகை, ஈகை, நன்றி மறவாமை இன்னும் இது போன்ற பல அரிய உயாந்த

என்று கவியரசன் கம்பனின் பிறப்பால் தமிழ் அன்னையும், தமிழ்நாடும் அடைந்த பெருமையை எடுத்து இயம்புகின்றார். இங்ஙனம் பாரதியால் புகழ்ந்து பாராட்டப் பெற்ற ஒட்டமும், நுட்பமும் வாய்ந்த கம்பனது இராம காவியத்தை ஒரு புதிய கோணத்தில் அணுகி அதன் காவிய நலன்களைப் பகுத்துக் காட்டிச சில செய்திகளை அறிவிப்பதே இக்கட்டுரையின் நோக்கம் எனக.

## செந்தாமரையினை வென்ற திருமுகம் :

பூ என்றால தாமரையையும், பழம் என்றால் வாழையையும குறிக்கும். தாமரையில் இரணடு வகை உணடு.

கின்றார் என்பதைக் காணபோம். தசரதனிடம் தான் பெற்ற இரண்டு வரங்களாகிய (1) பாதன் நாடாள வேணடும (2) இராமன் தவ வேடம் கொண்டு காட்டிற்குச் சென்று பதினன்கு ஆண்டுகாலம் இருக்க வேண்டும் என்ற இரணடையும் இராமபிரானிடம சொல்வதற்கு, தாய் என நினைக்கின்ற இராமனிடம் கூற்றென கைகேயி வந்து நின்று மேற்கூறிய இரணடு வரங்களையும் எடுத்துச் சொல்லுகின்றாள். அக கொடுஞ் சொற்களைக் கேட்ட இராமனது முகம் எந்த நிலையில் இருந்திருக்கும் என்று நாம் எதிர்பார்பபதற்கு மாறாக சந்தோஷத்துடன கூடிய அழகுடன் காணப்படுவதாகக கூறு

# கம்பன் கவியழகும் கம்பராமாயணக் காட்சிகளும்

கருத்துக்களையும் கம்பனது கவிதைகளிலே சுடர்விட்டுப் பிரகாசிக்கக் காணலாம். அவரது கவிதைகளை ஊன்றி படிக்கப் படிக்க நமது உள்ளம் உவகையால் பெருங்களிப்புக் கொணடு ஆனந்தக் கூத்தாடும். அப்பொழுது நாம் நமது துன்பத்தை யெல்லாம் மறநது அவரது கவியிலுள்ள கற்பனை என்னும் நீல வானில் பறந்து இன்பமடையலாம். அதனால் அன்றோ, உணர்ச்சிக் கவி பாடி சுதந்திர தாகத்தை உணடாகிய பாரதியாரும்,

'' யாமறிந்த புலவரிலே கமபனைப போல
வள்ளுவர்போல், இளங்கோவைப்
போல்
பூமிதனில் யாங்கணுமே கண்டதிலலை''

என புகழ்ந்து பாடியுள்ளார். மேலும அவரே ஓர் இடத்தில் தமிழநாட்டின் சிறப்புக் கூறுமிடத்து,

'' வள்ளுவன் தன்னை உலகினுக்கேதந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு...
கல்வி சிறந்த தமிழ்நாடு—உயர்
கம்பன் பிறந்தத் தமிழ்நாடு''...

ஒன்று செந்தாமரை, மற்றொன்று வெண் தாமரை. இவற்றில் செந்தாமரை மலரே மிகச் சிறப்பு வாய்ந்ததாகும். அதனால் அன்றோ தமிழர்கள் செந்தாமரை மலரிலே இலக்குமி உறைவதாகக் கூறியுள்ளார்கள். செந்தாமரை என்ற பெயரைககேட்டவுடனே அதன் அழகைப பற்றி சிந்திக்க நமது மனம் எணணுகிறது. அப்பெயருக்கேற்ப மலரும

**திரு. என். கோதண்டராமன்,**
**பெங்களூர்**

சிவந்து அழகாகத் தோற்றமளிக்கின்றது. அது தன் அழகான தோற்றத்தால் வண்டுகளையும் தன் பால் ஈர்க்கும் சக்தி வாயந்ததாக உளளது. கவிச்சுவையின் தல்வரவால் தன் இன்முகங்காட்டி மலர்ந்து அழகாகத் தோற்றமளிக்கும் இச்செந்தாமரை மலர் கவிச் சக்கரவர்த்தி கம்பனின் கவிதையிலும் இடம் பெறுகிறது.

கவிஞர் இம்மலரை எவ்வாறு தனது கவிதையிலே புனைந்து காட்டு

கின்றார். அம்முகத்தை அவர் செந்தாமரை மலருக்கு ஒப்பிட்டுக் கூறும் திறன் மிகவும் பாராட்டுதலுக்கு உரியது. அவ்வொப்பனையைக் கவிதையிலே காணபோம்.

'' இப்பொழுதெம்மனோரால் இயம்புதற்
கெளிதோயாருஞ்
செப்பருங்குணத்திராமன் திருமுகச்
செவ்வி நோக்கின்
ஒப்பதே முன்பு, பின்புஅவ்வாசக
முணரக்கேட்ட
அப்பொழுதலர்நத செந்தாமரையினை
வென்றதம்மா''

## கைகேயியின் வஞ்சக உள்ளம் :

தான பெறற இரணடு வரங்களை கைகேயி இராமனிடம் கூறும்போது அவளது வஞ்சக உள்ளத்தை வெளிப்படுத்த எண்ணிய கம்பர் அப்பாடலின் மூலம் அதை சுவையாக அமைத்துக் காட்டுகின்றார். அக்கவிதையினை நாம் படிக்கும் போது கைகேயி வஞ்சகமெல்லாம் ஒன்று சேர்ந்து ஒரு பெண்ணுருத் தோற்றங்கொண்டு

வந்துவிட்ட கூற்றுவனோ என எண்ணத் தோன்றும்; இதோ அக் கவிதையழகினைக் காண்போம்:

'' ஆழிசூழுலகமெலலாம் பரதனே யாள நீ போய்த்
தாழிருஞ்சடைகள தாங்கித் தாங்கருந் தவமேற கொண்டு
பூழிவெங்கான நண்ணிப புண்ணிய நதிகளாடி
யேழிரண்டாண்டின் வாவென்றே இனவினள அரசன எனறான்''

பொதுவாக உலகமெல்லாம் என்று கூறினால் உலகத்திலுள்ள சிறு நில பரப்புகள் கூட விடுபட்டுவிடும். அதையும் இராமன் அடையக் கூடாது. உலகத்திலுள்ள எல்லாப் பகுதிகளையும் தன் மகன் பரதனே ஆள வேண்டும் என்று அவளது வஞ்சக உள்ளம் எண்ணியது. அதனால் தான் கம்பர் 'ஆழிசூழ் உலகமெல்லாம்' என்று கூறுகின்றார். இங்ஙனம் ஆழ்கடலால் சூழப்பெற்ற இப்பரந்த உலகத்தை தன் மகன் பரதனே யன்றி மற்ற யாவரும் ஆளககூடாது என்று எண்ணிய கைகேயி அதனை வலியுறுத்த வேண்டி, 'பரதனே ஆள' என்ற சொல்லில் 'ஏ' காரத்தை மிகவும் மிகுதிப்படுத்திக் கூறினார். கம்ப நாட்டாழ்வார் அடுதது இராமன் காட்டிற்குச் சென்று நீணட சடை முடிகளைத் தரித்துக் கொண்டு தாங்குதற்கு அரிதான தவத்தை மேற்கொண்டு வாழ வேண்டும் என்று கூறுகிறாள் கைகேயி. இராமன் சடை முடிகள் தரிக்காமலும் தவ வேடம் கொள்ளாமலும் சாதாரணமாகக் காட்டிற்குச் செல்லுவான் ஆயின் அவனுக்கு உலகத்தின் மீது பற்றுதல் ஏற்படும். அதன்மூலம் ஆசை உண்டாகும். பின்பு நாட்டையும் ஆள வேண்டும் என்ற எண்ணமும தோன்றக் கூடும். அவ்வாறு இராமன் நாடாள வருவான் ஆயின் தன மகன் நிலை என்னவது என்று எண்ணிய கைகேயி,

'' . . . . . . . . . . . . நீ போய
தாழிருஞ் சடைகள தாங்கி தாங்கருந் தவமேற கொணடு''

என்று கைகேயி கூறுவதாகக் கம்பர் கூறுகின்றார். கைகேயியின் வஞ்சக உள்ளத்தை வெளிப்படுத்த இதைக் காட்டிலும் சிறநத கற்பனை தேவை யில்லை என்று கூறலாம். அவ்வளவு அழகாக கவிஞர் இச்செய்யுளை அமைத்துக் காட்டுகின்றார். உலகத்தில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன் பது பகுதி சிற்றன்னையின் கொடுமைகள் நிறைந்து இருப்பதை நாம் கண கூடாகக் காணகின்றோம். இதற்கு கைகேயியும் விதி விலககல்ல என் பதைக்கம்பர் இச்செய்யுளின் மூன்றும் அடியில் குறிப்பிடுகின்றார். தவத்தை மேற்கொண்டு காட்டிற்குத் தான செல்ல வேணடுமென்று கூறு கின்றாளே அதோடு நிறுத்தி விடலாமல்லவா! புழுதிகள் மிகுந்த கொடுமையைத் தருகின்ற வெம்மையான கானகத்திற்குச் செல்ல வேணடுமாம். காட்டில் 14 ஆணடுகள் வாசம் செய்ய வேண்டும் என்பதை மிகவும் குறைநத நாட்கள்தான் உளளன என்பதைப் போல் 'ஏழிரண்டாண்டின் வா' என்கிறாள். இவ்வளவும் கூறிய பின்பு 'இதை யெலலாம் நான் சொல்லவில்லை, உன் தந்தைதான் சொன்னார். அதைத தான் உன்னிடம் நான் சொன்னேன்' என்று கூறித் தன்மீது பழி இல்லாமல் தப்பித்துக் கொள்கிறாள். இப்போது கடைசி இரண்டடியில் கம்பனது கவிதை வாயிலாக கைகேயியின் உள்ளத்தை அறியலாம.

'' பூழிவெங்கான நண்ணிப் புண்ணிய நதிகளாடியே
ழிரண்டாண்டின் வாவென்றே வின வினள் அரசன என்றாள்''

## வீர இராவணன்:

இராவணன் மிக வீரமுள்ளவன். அவனது மார்பு, தோள் ஆகியவை உறுதி வாய்நதவை. அசைக்க முடியாத உடற்கட்டினை உடையவன். ஒரு சமயம் அவன் பல நாடுகளை வென்று புஷ்பக விமானம் மூலம் இலங்கை திருமபிக் கொண்டிருக்கும போது பார்வதியுடன் சிவபெருமான அமர்ந்திருந்த மேருமலை அவனது புஷ்பக விமானத்தைத் தடுத்து விடுகிறது. அதனால் கோபங்கொணட இராவணன் தன் தோள் வலியால் மேருமலையை அடியோடு பெயர்த்து மேலே தூக்குகின்றான். இவ்வாறு அவன் மலையைத் தூக்குவதைக்கண்ட சிவபெருமான் தன் கட்டை விரல் மூலம் அம்மலையை மீண்டும் கீழ் நோக்கி அழுத்தினாராம். பாவம இராவணன மலையின் அடியில் சிக்குண்டுத் தவித்தான். உடனே இரா

# ग - எழுத்தின் மகிமை

திரு. சி ஆர். திருவேங்கடத்தான்-டால்மியாபுரம்

வடமொழியான சமஸ்கிருத பாஷையில் ग-என்ற எழுத்திற்குத் தான் அதிகமான மகிமை உள்ளது. அந்த ग-வில் ஆரமபித்துள்ள கீழ் கணட நானகு வார்த்தைகள் மிக்க மகிமை உள்ளவை ·

गंगा-கஙகா
गीता-கீதா-கீதை
गायत्री-காயத்ரீ
गोविन्द-கோவிந்தன்.

இந்த வார்த்தைகளை தினந்தோறும் ஒரு தடவை கூறினால் நம் பாபங்கள் விலகி புண்ணியம் நிச்சயம் கிட்டும். இது கண்கூடான உண்மை.

வணன் தனது பத்துத் தலைகளில் ஒன்றைக் கிள்ளி எடுத்து அத்துடன் நரம்பை இணைத்து இசை மீட்டினன். சிவன் அந்த இசை மயக்கத்தில் தன்னையும மறநது அழுத்திக் கொண்டிருநத தன் விரலை எடுத்து விடுகின்ருர். இராவணனும் தப்பித்துக் கொள்ளுகின்ருன். ஒரு சமயம் இராவணன் யானையை எதிர்த்துப் போர் செய்தான். அப்போது யானையின் கூரிய தந்தமானது இராவணனது மார்பில் குத்திவிட்டது. மீண்டும் அக்கொம்பினை எடுப்பதற்கு எவ்வளவு முயற்சித்தும வெளிவராமல் ஒடிந்துவிட்டது. இராவணன் அதனையும் பொருட்படுத்தாது கடைசிவரை போர் செய்து யானையை தோற்கடித்தான். இறுதியில் அக்கொம்பினை மார்பில் இருந்தபடியேவைத்து நவரத்தினங்களைப் பதித்து அழகு பார்த்தானும். இவ்வளவு வீரமும் தீரமும் பொருந்திய இராவணன் இராமபிரானிடம் போர் செய்யும் போது வீரம் இழந்தத் தன்மையைக் கம்பர் தன்கவிதையில் கூறும் நயம் பாராட்டுதலுக்கு உரியது. முதலில் இராவணன் வீரத்தையும், அவனது புகழையும் கூறிய கம்பர், பின்பு அவ்வீரத்தையெல்லாம் ஆயுதங்களுடன் இழந்தத் தன்மையை மிக அழகாக எடுததுக காட்டுகின்ருர்.

"வாரணம் பொருத மார்பும
வரையினை யெடுத்தத் தோளும்
நாரத முனிவர்க் கேறப
நயமபட உரைத்த நாவும
தாரணி மௌலி பததும்
சங்கரன் கொடுத்த வாளுமு
வீரமும களத்தே போகட்டு
வெறுங்கையோடு இலங்கை
புக்கான்"

மார்பு, தோள், நா, ஆகிய தற்கிழமைப் பொருள்களையும், மௌலி, வாள் முதலிய பிறதின் கிழமைப் பொருள்களையும் இராவணன் போர்க்களததில் இழநது விடுகின்ருன் அவன் வீரம் இழந்த தன்மையே மற்ற பொருள்களையும இழப்பதற்குக் காரணமாக அமைந்தன.

## கற்பின் அணிகலன் சீதை :

சீதையை இராவணன் தூக்கிச சென்று அசோக வனத்தில் சிறை வைத்து விடுகின்ருன். இராவணனுல் பிரிக்கப்பட்ட சீதை பிரிவுத் துன்பம் தாளாது அழுது புலம்புகின்ருள். சீதையின் பிரிவுத் தாங்காமல் இராமனும் மனம் கலங்குகின்ருன். சீதையைத் தேடி வரும் பொருட்டு எல்லா திக்குகளுக்கும் வானரப் படைகளை அனுப்பி விட்டுத் தென் திசைக்கு மட்டும் அனுமனை அனுப்பி வைக்கினுர் இராமர். தென் திசையை நோக்கி இலங்கை வந்தடைந்த அனுமன் அசோக வனத்தில் சீதையைக் கண்டு பெருங்களிப்பு கொள்ளுகின்ருன் அனுமன் தான் கொண்டு வந்த கணையாழியை சீதையிடம் காட்டித் தான இராமனுடைய தூதுவன் என்ற நம்பிக்கைக்குப் பாத்திரமாகிருன. மோதிரத்தைக் கண்ட சீதை இராமனையே நேரில் கண்டது போல் அளவிட முடியாத பேருவுவகை அடைகிருள். பிறவியிலிருந்தே கண் பார்வையிழநத ஒருவன் திடுமெனக் கண பார்வை வரப்பெற்றது போலவும, மாணிககக கல்லை இழந்த நாகம் மீண்டும் அதுபெறப்பட்டது போலவும், விலை மதிகக முடியாத ஒரு பொருளை இழந்தவர்கள் அப்பொருள் கிடைத்தவுடன் களிப்படைவது போலவும், நீண்ட நாட்களாக அடைய முடியாத ஒரு பொருளை இழந்தவர்கள் அப்பொருள் கிடைத்தவுடன் களிப்படைவது போலவும் குழந்தை இல்லாத மலடி குழந்தைச் செல்வம் கிடைக்கப் பெற்றது போலவும் சீதையின் உளளம் சூளாமணியைக் கண்டவுடன் ஆனந்தமடைகிறது. பின்பு சீதையும் தன்னிடமுள்ள மோதிரத்தையும் ஆபரணங்களையும் கழற்றி அனுமனிடம் கொடுதது அதை இராமபிரானுக்குக் காண்பிக்கும்படி கூறுகின்ருள். ஆபரணங்களை இழந்து நகை அணி இன்றி வெறுமனே இருப்பதைக் கண்ட கடல் மடந்தை மனம் இரங்கி மோதிரம் என்று சொல்லக் கூடிய ஒளி வீசத் தக்கதான சூரியனை விண்ணுக்குக் அனுப்புகின்ருள். அனுமனும் சீதையிடம விடை பெற்றுக் கொண்டு இராமபிரான் இருக்கும் தண்ட காருணயத்திற்கு வருகின்ருன். இராமன் அனுப்பிய எல்லா படைகளும் எல்லா திசைகளிலிருந்தும் வந்துவிட்டன. நீண்ட நாட்களுக்குப் பின் தென் திசையில் இருந்து வெற்றிப் புன்னகையோடு அனுமன் வருவதைக கண்ட, குறிப்பினுல் உணரும் கொள்கையை உடையவனை இராமன் சீதை உயிருடன் தான் இருக்கிருள் என்பதை அறிந்து கொளகிருன். சீதை உயிருடன் இருக்கிருள், அவளது கற்பு களஙக மற்றது, கற்பினுக்கு அணி போன்ற தூய்மை உடையவள் என்பதை அனுமன் இராமனிடம் சொல்லுகின்ருன். அப்படி சொல்லும்போது எதைமுன் சொல்ல வேண்டும, எதைப் பின் சொல்ல வேண்டும் என்பதையெல்லாம கமபர் கவிதையே நயம்பட

## விண்ணப்பம்

ஸப்தகிரிக்குக் கதை கட்டுரைகளை அனுப்பும் ஆசிரியர்கள அவற்றின்பின் தங்கள் முழு முகவரியினை ஆங்கிலத்தில் எழுதவும். பிரசுரிக்கப்படும் துணுக்குகளுக்குச் சன்மானத் தொகை வழங்கப்படமாட்டா. சமபந்தப்பட்டவர்களுக்கு ஒரு இதழ் மட்டுமே அனுப்பப்படும். இந்து சமய விழாக்கள் பற்றிய கதை கட்டுரைகளை இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்பாகவே அனுப்பினுல், தகுந்த தேர்வுக்குப் பின்னர் அவை அவ்வவ் மாதங்களில் பிரசுரிக்க உதவியாக அமையும்.

அறிவிக்கின்றது: அக்கவிதையினைப் பார்ப்போம்.

''கண்டனென கற்பினுக்கு அணியை
கண்களால்
தெண்டிரையலை கடல இலங்கைத
தென்னகர்
அண்டர் நாயக வினித்து றத்தியை
யழும
பண்டுளதுயருமென்றனுமன பன்னு
வான்''

அனுமன் சீதையைக் கண்டானோ இல்லையோ என்ற ஐயப்பாடு இராமன் உள்ளத்தை சஞ்சலப்படுத்தும் என்பதை அறிந்த கம்பர் முதலிலேயே 'கண்டனன்' என்ற வார்த்தையை அமைக்கின்றார். (இதையே வால்மீகி தன் கவிதையில் 'த்ருஷ்டா சீதா' என்றுதான் கூறுகின்றார்) அடுத்து அவள் கற்புடையவள்தான் என்பதைச் சொல்ல எண்ணிய கம்பர் 'கற்பினுக்கு அணியை' என்ற சொல்லை இரண்டாவதாக அமைத்துக் காட்டுகின்றார். மூன்றாவது சொல்லிலே கண்டது வேறு யாருமல்ல அனுமனே என்பதைக் குறிக்க 'கண்களாற்' என அமைக்கின்றார். இவ்வளவு கூறிய அனுமன் சீதை கற்புடன்தான் இருக்கிறாள் என்பதற்கு ஒரு விளக்கமும் கூறுகின்றான். சீதை உன்னையே (இராமனையே) நினைந்து நினைந்து அழுது கொண்டிருக்கின்றாள். அதனால் அவளது கண்கள் கொவ்வைப் பழமென சிவந்துவிட்டது. அதனால் அவளது கண்களிலிருந்தே அவள் கற்புடையவள்தான் என்பதைத் தெரிந்து கொண்டேன். அதாவது 'கண்களால் கண்டேன்' என்கிறான். அனுமன் இது போன்ற நயங்கள் நிறைந்த பல கவிதைகளைக் கம்பனது காவியத்தில் காணலாம். ஆகவே யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல் . . . யாங்கணுமே கண்டதில்லை என்று பாரதியால் பாராட்டப் பெற்ற கம்பரும் அவரது கவிதைகளும இலக்கிய சுவை மிக்கன என்பதை அறிவோமாக.



சமுதாயம் என்பது தனி மனிதர்கள் பலர் சேர்ந்த கூட்டாகும். இது குழுவினின்று மாறுபட்டது. மிகவும் குறைந்த எண்ணிக்கையுடையதும், ஒரு நோக்கின் அடியாக ஏற்பட்டதும் குழுவாகும். தனிமனிதர்கள் பலர் சேர்ந்து வாழ்வது சேரி அல்லது கூடும்பமெனவும் அழைக்கப்படும். இவையனைத்தையும் உள்ளடக்கியதே சமுதாயம் எனப்படும். தனிமனிதர் பலரின் பழக்க வழக்கங்கள் சமுதாயப் பழக்கவழக்கங்களாகின்றன.

அடிமை விட்ட செய்தியைப் பொன்னமராவதிக் கல்வெட்டொன்று குறிக்கிறது. 'தொண்டு செய்யும் அடிமை உனக்குச் சுதந்திர நினைவோடா'' எனப் பார்புகழும் பாரதியாரும் குறிப்பிடுகின்றார். ஒருவர் மற்றொருவருக்கு அடிமையாகிவிட்டால் அவர் மரபினரும் அடிமையாகி, விடுகின்றனர். செந்தமிழ்ச் சேக்கிழாரும் சுந்தரத் தமிழ் பாடிய சுந்தரைக் குறிக்கும் போது ''மாதொரு பாகனுர்க்கு வழிவழி

பெறச் செய்வதாகும். வள்ளுவப் பெருந்தகையும்,

'' பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த
மக்கட் பேறு அல்ல பிற'' என்றார்.

அன்றும் இன்றும் சமுதாயத்தில் குழந்தையில்லாதவர்கள் குறையுடையவர்களாகவே கருதப்படுகின்றனர். சக்ரதாரியாகிய குழந்தையைக் கையில் வைத்துக் கொண்டு அக் குழவியுடன் விளையாடச் சந்திரனை

# பெரியாழ்வார் குறிப்பிடும் சமுதாயப் பழக்க வழக்கங்கள்

இப்பழக்க வழக்கங்களில் சில அழியாது நிலைத்து நிற்கின்றன; சில மாறுகின்றன; சில புதியனவாகத் தோன்றுகின்றன. நமது நூல்கள் பலவும் சமுதாயப் பழக்க வழக்கங்களைச் சுட்டிக் காட்டுகின்றன. அந் நூல்களடியாக அன்றைய சமுதாய அமைப்பினை நாம் அறிந்துகொள்கின்றோம். கல்வி வல்ல நல்லார் பலர் வாழ்ந்தஊர் ஸ்ரீவில்லிபுத்தூர். அத்திருப்பதியில் சுமார் 9-ஆம் நூற்றுண்டினளவில் வாழ்ந்த பெருந்தகையாளர் பெரும்புகழ்படைத்த பெருமாள் அடியார், பெரியாழ்வார். சூடிக்கொடுத்த சுடர்க்கொடியை வளர்த்தளித்த தந்தையும் இவரே யாவர். மயர்வற மதிநலம் பெறற ஆழ்வாராகிய இவரது அருளிச் செயல்கள் முதலாயிரத்தில் விளங்குகின்றன. இவரது அருள்மொழிப் பாக்கள் 473 ஆகும். அவ்இனியப்பாக்களின் வழியே அன்றையச் சமுதாயப் பழக்க வழக்கங்களைப் பார்ப்போம்.

**அடிமை முறை :**

பழங்காலச் சமுதாயத்தில் அடிமை முறை வழக்கிலிருந்தது. இதனைக் கல்வெட்டுகளும் இலக்கிய நூல்களும் தெளிவாகக் குறிக்கின்றன. சகாப்தம் 1040-ல் (1118 A.D.) கைக்கோளர் ஒருவர் தேவ அடிமை செய்யும் வேதியர் குலத்துள் தோன்றி''என்று கூறியுள்ளார். மானிடன், மானிடன் ஒருவனுக்கு வழிவழி அடிமையாக இருப்பதை விட என்றுமுள பரம்பொருளுக்கு வழிவழி அடிமையாகயிருப்பதே சிறப்பல்லவா? இறைவனுக்குத் தன்னையும் தன் குலத்தவரையும் வழிவழி அடிமையாக்கிக் கொள்வது அன்றையச் சமுதாயப் பழக்கங்களிலொன்று.

'' எந்தை தந்தை தந்தை தந்தைதம்
மூத்தப்பன் ஏழ்படி கால்தொடங்கி
வந்து வழி வழியாட் செய்கின்றோம்.''
(திருப்பல்லாண்டு 6)

என்கின்றார் வில்லிப்புத்தூர் விஷ்ணு சித்தர்.

**மக்கட் செல்வம் :**

'செல்வம் என்பது சிந்தையின் நிறைவே' என்றனர் செந்தமிழ் வல்லார். இருப்பினும் நாம் பொருட் செல்வம், அருட் செல்வம், கல்விச் செல்வம், மக்கட் செல்வம் எனப்பல வாறாகப் பிரித்துவைத்துள்ளோம். எல்லாச் செல்வத்திலும் மக்கட் செல்வத்தையே சிறப்பாகப் போற்றுவர் பலர். புத்தெனும் நரகத்திற்குச் செல்லவிடாது காப்பவன் புத்திரன் என்பர். மக்கட் செல்வமே ஒருவனது மரபு அழியாமல் காத்து நிலை

அழைக்கின்றாள் தாய்; குழந்தையும் விண்ணிலவையே சுட்டிக் காட்டுகின்றது. அன்னையும் அம்புலியை அழைக்கும் போது ''மக்கட் பெறாத மலடனல்லை யேல்வா'' (1-4-4) என்கின்றார்; மலடு என்னும் பழிதீர்க்க வந்த மாநிதியும் நல்ல குழந்தையாக அமைந்து விட்டால் பழிக்கின்ற சமூதாயம் அத்தாயைத் தந்தையைப் பாராட்டுமல்லவா?


புலவர். சீ இலட்சுமணன்,
எம் ஏ பி.எட்.
சிங்கம்புணரி.


'' மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல் எனுஞ்சொல''

என தெய்வப் புலவரும் பாராட்டுகின்றாரல்லவா? கண்ணனை வயிறுழைந்து பெற்ற தாயை ''என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப் பெற்றவயிறுடையாள்'' (2-2-6) எனப் பாராட்டுகின்றார் கோதை நாச்சியாரின் தந்தை.

**குழந்தை வளர்ப்பு:**

நோன்பிருந்து பெற்ற குழந்தையைக் கண்ணென, கண்ணின் மணியென வளர்ப்பது இயற்கைதானே. ஆயர்குலத்துத் தோன்றிய ஐயனை

எவ்வாறெல்லாம் சீராட்டிப் போற்றினர் எனபதன மூலம் அற்றைச சமுதாயப் பழக்க வழக்கங்களையும் கோடிட்டுக் காட்டுகின்றார். குழநதை கை கால்களை மடக்கிக் கொண்டிருக்கிறது. அதனை நீராட்டுகின்றபோது, மடங்கி யிருக்கின்ற கை கால்களை நிமிர்த்தி விடுகின்றனர். பெரிய கடாரம் எனும் பாத்திரம் நிறைய நன்னீர் வைத்துள்ளனர். உடம்பெல்லாம் மஞ்சளைத் தேய்த்து, கோழை வடியும் நாவினை வழித்துவிட்டு நீராட்டுகின்றனர்.

'' ...நுணுகஙிய மஞ்சளால்
நாக்கு வழித்து நீராட்டும...''
(1-2 15)

'' கையுங்காலும் நிமிர்த்துக் கடாரநீா
பையவாட்டிப பசுஞ்சிறு மஞ்சளால
ஐய நாவழித்து''.........(1-1-6)

குழந்தை பிறநத 12ஆம் நாள் உத்தானம் செய்வார்கள். அது அன்றையப் பழக்க வழக்கங்களிலொன்று. இன்று நாம் இதனை புண்ணியாவசநம் என 10, 11, 16 ஆகிய நாட்களில ஏதேனுமொன்றில் கொண்டாடுகின்றோம். பெரியாழ்வார் காலத்தில் இது, குழநதை பிறந்த 12வது நாள் கொணடாடப் பட்டது என்பதை,

'' பத்து நாளுும கடந்த இரண்டாநாள
............... .........
உத்தானஞ் செய்து உகந்தனர்
ஆயரே''(1-1-8)

என்பதனால் அறிகின்றோம்.

இன்று குழநதையை நீராட்டவும், அலங்கரிக்கவும் பலவித நறுமணப் பொருள்களை உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் வாங்கிப் பயன்படுத்துகின்றோம். ஆனால் நம்முன்னோர் மணமிகு எண்ணெய், வெந்நீர், நெல்லி, மஞ்சள், செங்கழுநீர் மலர், புளிப்பழம் முதலியவற்றைப் பயன் படுத்தினர்.

'' எண்ணெய் புளிபபழஙகொண்டு இங்
கெத்தனை போதுமிருந்தேன்(2-4-1)

'' காய்ச்சின நீரொடு நெல்லி கடாரத்
திற பூரிதது வைத்தேன்''(2-4-3)

'' மஞ்சளும் செங்கழுநீரின வாசிகையும்
நாறுஞ்சாந்தும
அஞ்சனமும கொணடு வைத்தேன...''
(2-4-4)

இந்துக்களாகிய நமக்குரிய சடங்குகளில் ஒன்று காது குத்துதல். இதனைக் காதணி விழாவெனச் சில பகுதிகளில் மிகச் சிறப்பாகவும் கொண்டாடுகின்றனர். கண்ணனுக்குக் காதணி விழா நடத்த வேணடாவா? அன்னை யசோதை அன்போடு அழைக்கின்றாள். விழாவிற்கான ஏற்பாடுகளெல்லாம் செயதாகிவிட்டன. பெணடிர் பலரும் வநது குழுமி விட்டனர். கேசவனை யொத்த பிள்ளைகளெல்லாம் காது பெருக்கி வீதியில விளையாடித் திரிகின்றனர். அன்னையின் அழைப்பை கண்ணன் செவி மடுக்கவில்லை.

'' கேசவ நமபீ யுனனைக் காது குதத
ஆயபபாலர் பெண்டுகள் எல்லாரும
வந்தார்
அடைக்காய திருதநி நான் வைத்தேன்
(2-3-1)

'' சேரியிறபிளளை களெல்லாருங் காது
பெருக்கித
திரியவுங் காணடி..'' (2-3-10)

'' உன்னைக் கனிகள் தருவன் கடிப்
பொனறும நோவாமே காதுக்
கிடுவன''(2-3-11)

**உணவு வகைகள் :**

நாம் உண்ணும் உணவு, பலகார வகைகள் காலந்தோறும் மாறுகின்றன. இன்றைய நாளில் மாலையில் இனிப்பு, காரம் உணபதும், விழாக் காலஙகளில் பல்வேறு மாநிலங்களிலும் தயாரிக்கப்படும் பலகாரங்களைத் தயாரிப்பதும் பெருவழக்காயுள்ளதல்லவா? மைசூர்பாகு, கல்கத்தா ரசகுல்லா, கேரள அடைப் பிரதமன், ஆந்திர ஆவகாய் ஊறுகாய், தமிழ்நாட்டு இட்லி, சாம்பார், டில்லி பாதுஷா ஆஹா! பல வகையான உணவுகள் நம் வீட்டு அடுக்களையை ஆக்கரமித்து விட்டன. மல்லிநாட்டு வில்லிப்புத்தூர் தோன்றிய அசசுதனடியார் குறிக்கும் உணவு வகைகளையும் அறிந்து சுவைப்போமே!

பாலில் சர்க்கரையைக் கலந்து அப்பம் செய்து சிற்றுணடியாகச் சாப்பிட்டனர்.

'' அப்பஙகலந்த சிறறுண்டு அக்காரம
பாலிற கலநது
சொப்பட நான சுட்டு வைத்தேன் ''
(2-4-5)

இது மட்டுமா? இலட்டு, சீடை, எள்ளுருணடை, கும்மாயம் முதலியன வும் அன்று உணணப்பட்டன.

'' கனனலிலட்டு அத்தோடு சீடை
காரெள்ளின் உண்டை,.. (2-9-9)
குமமாய்த் தொடு வெண்ணெய்
விழுங்கி '' (3-1-3)

(கும்மாயம் என்பது நெல்லை மாவட்டத்தில் பலவகைப் பயிறுகளும் வெல்லம் அல்லது கருப்புக கட்டி சேர்த்துத் தயாரிக்கப்படும பண்டம். இதனை இப்போது கும்பியாணம் என வழுச்சொல்லால் அழைக்கின்றனர்).

தநதைமார்கள் தங்கள் குழந்தைகளையும் அருகமர்த்தி அவர்களுடன உணவு உட்கொண்டனர் என்பதை,

'' ....அமுது செயய அப்பனும் உண்டிலன
உனனோடுடனே யுண்பான் '' (3-3-3)

எனும் அடிகள் புலப்படுத்துகின்றன.

**சிறுவர்களின் பழக்க வழக்கங்கள் :**

துள்ளித் திரிகின்ற கள்ளமில்லாப் பருவம் சிறுபிள்ளைப் பருவம். சிறுவர்கள் எல்லாயிடங்களிலும் திரிந்து விளையாடும் மான்குட்டிகள்; இளஞ் சிட்டுகள்; சிங்கக் குருளைகள். வேலியிலுள்ள கம்பையொடித்து வில்லாகக்கட்டி, கழுததில் ஐம்

படைத் தாலியணிந்து, பீலிசூடி கன்றுகளுக்குப் பின்னே செல்கின்றனர்.

'' வேலிக்கோல வெட்டி விளையாடு
விலலேற்றி
தாலிக் கொழுந்தைத தடங்கழுததிற
பூண்டு
பீலித்தழையைப் பிணைத்துப்
பிறகிட்டு
காலிப பின் போவார்....'' (2-6-1)

சிறுவர்கள் ஒருவரோடொருவர் சண்டையிடல், பழிதூற்றல், தன் பிள்ளையைத் தாயார் பாராட்டுதல் இன்றுமட்டுமல்ல, அன்றுமுண்டு.

'' கண்ணில் மணற்கொடுதூவிக
காலினற் பாய்ந்தனை யென்றென்று
எண்ணரும பிள்ளைகள் வந்திட்டு
இவரால் முறைப்படுகின்றார் ''
(2-8-4)

'' பல்லாயிரவா இவ்வூரிற் பிளளைகள
தீமைகள் செய்வார்
எல்லாமுன் மேலன்றிப் போகாது
எம்பிரான் நீயிஙகே வாராய ''
(2-8-5)

**ஆயர் சமுதாயப் பழக்கங்கள் :**

மாயோன் மேய காடுநிறை நிலத்தில் வாழும் ஆகாத்தோம்பி ஆப்பயனளிக்கும் கோவலர் வாழ்க்கை கொடும்பாடில்லா வாழ்க்கையல்லவா? பசுக்களை நாம் வெறும் விலங்குகளாகக் கொள்ளாமல் காமதேனுவாக, கோமாதாவாகப் போற்றி வணங்குகின்றோம். ஆயர்களும் கோபாலர்கள் என்று சிறப்பிக்கப்பட்டனர். பசுக்களும் பால் கொடுக்கும் பசுக்களாக வல்லாமல் ''வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்களாக'' விளங்கின. அத்தகைய வள்ளல் தன்மை மிகுந்த பசுக்களிடமிருந்து ஆய்ச்சியர் பாலைக் குடங்குடமாகக் கறப்பர; அதனை அடுப்பிலிட்டுக் காய்ச்சுவர்; அதற்காக நெருப்பெடுக்க அண்டை வீட்டிற்குச் செல்வர்; தமக்கேயுரிய வம்புக் கதையும் பேசுவர்.

'' பாலைக் கறந்தடுப் பேற வைத்துப்
பல்வளையாள என் மகளிருப்ப
மேலையகத்தே நெருப்பு வேணடிச
சென்று
இறைப் பொழுதங்கே பேசி
நின்றேனை '' (2-9-5)

ஆயர்கள் பாலைக் கலங்களில் நிரப்பி காவடியாகக் கட்டிக் கொணர்வர்; ஆய்ச்சியர் மோரை எடுத்துச் சென்று விற்று வருவர்.

'' கப்பாலாயாகள் காவிற் கொணர்ந்த
கலத்தொடு......... '' (3-1-5)

'' தாயமசர் மோர் விற்கப போவர்
தமப்பன்மார் கற்றுநிரைப் பிடைபு
போவர் '' (3-1-9)

**மனிதனை எச்சரித்தல் :**

அரிதரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது. அவ்வரிய பிறப்பினைப் பெற்ற மனிதன் குறிக்கோளுடன் வாழ வேணடும். ''குறிக்கோளற்ற வாழ்க்கை வெற்று வாழ்க்கை'' யென்றார் கவியரசர் தாகூர். ''குறிக்கோளிலாது கெட்டேன்'' என்று குறைபட்டுக்கொண்டார் நாவுக்கரசப் பெருந்தகை. ''கொன்றேன் பல்லுயிரை குறிக்கோளொன்றிலாமையினால்'' என்று பாடினார் திருமங்கையாழ்வார். மனித வாழ்க்கையின் குறிக்கோள் இறைவனைச் சரணடைதலேயாம்.

'' ஊன் இடைச சுவர்வைத்து என்பு
தூண் நாட்டி
உரோமம வேயந்து ஒன்பது வாசல்
தானுடைக் குரமபை பிரியும்
போது ''

மனிதன் என்ன செய்வான்? அதற்கு முன்னரே ''பேராயிரமுடைய பிறப்பிலியை'' நாவாரத் துதித்திருக்க வேணடும். அவ்வாறு செய்யாமல் வாணாளை வீணாளாகக் கழித்து, இறுதிக்காலத்தில் ஒருவன் படும்பாட்டை எடுத்துக் கூறுகிறார் புகழ்படைத்த பெரியாழ்வார். ஆசைவாய்ச் சென்றழிகின்றவர்களை அற்றைச் சமுதாயம் நல்லோர் வழி எச்சரித்துள்ளது;

''காதற்ற ஊசியும் வராது காண கடைவழிக்கே'' என்ற உண்மையை உணராது வாழ்கின்ற காலத்தில் ஓடியாடி எப்படியெல்லாமோ மனிதன் செலவத்தைச் சேர்த்தான். ஆனால் இறுதிக் காலத்திலோ சுற்றத்தார் சுற்றியிருந்து ''சேர்த்துவைத்த செல்வமெங்கே எங்கே'' என்று வினவி அவனைத் துன்புறுத்துவர் என்பதனை,

'' சோர்வினால் பொருள் வைத்த
துண்டாகில்
சொல்லு சொல்லென்று
சுற்றுமிருந்து
ஆர்வினவிலும் வாய் திறவாதே
அந்தக் காலம '' (4-5-3)

'' வாயொரு பக்கம் வாங்கி வலிப்ப
வார்ந்த நீர்க் குழிக்கண்கள்
மிழற்ற
தாயொரு பக்கம் தந்தையொரு பக்கம்
தாரமொரு பக்கம் அலற்ற.. ''
(4-5-9)

எனும் அடிகளில் ஆழ்வார் அழகாக அறிவுறுத்துகின்றார். நாம் வாழ்கின்ற காலத்தில் செய்கின்ற நல்லனவும் தீயனவும் சித்ரகுப்தனால் குறித்து வைக்கப்படுகின்றன. எம தூதுவர் தென்புலக்கோன் ஏவலைச் செய்து முடிப்பர் என்ற நம்பிக்கை ஆழ்வாரகாலச் சமுதாயத்தில் ஆழ வேரூன்றியிருந்தது.

'' சித்திரகுததனெழுத்தால தென்புலக்
கோன்
பொறியொற்றி
. ...தூதுவா...... '' (5-2-2)

இவை மட்டுமன்றி குழந்தையின் பிறந்தநாள் விழா, தொட்டிலிடல், அம்புலி காட்டல், பூச்சி காட்டல், சப்பாணி கொட்டல் போன்ற பல விதமான பழக்க வழக்கங்களுமிருந்தன என்பதைப் பெரியாழ்வார் பாடல்கள் உள்ளங்கை நெல்லிக்கனியென விளக்குகின்றன. ★

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூசைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை (அமந்த்ரஞோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரஞோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வதரிசனம்

மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாந்தம்) 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்

1-00 முதல் 7-00 வரை: கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை முதலியன

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், இரவு மணி

8-00 முதல் 10-00 (இரவு) ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்த சேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை (அமந்த்ரஞோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரஞோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாஙகிய நபர்கள் மட்டுமேஅனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை 2வது மணி.

8-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்.

மதியம் : 1-00 முதல் மாலை 7-00 வரை: ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள் வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன,

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல் இரவு 10-00 வரை ஸர்வதரிசனம்.

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, நடைபெறுவதால்)

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 4-30 வரை : நித்ய கட்டளை கைங்கர்யங்கள் அதாவது சுத்தி, தோமால, அர்ச்சனை முதல்மணி மற்றும் அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம்

6-00 முதல் 7-30 வரை : மூலவருக்கு சமர்ப்பணை

7-30 முதல் 9-00 வரை : தோமாலா சேவை, அர்ச்சனை 2-வது மணி, பலி, சாத்துமுறை முதலியன

9-00 முதல் இரவு 6-00 வரை : ஸர்வதரிசனம்

மதியம் 1-00 முதல் மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோற்சவம், பிரம்மோத்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் மற்றும் மற்றைய ஆர்ஜித சேவைகள்

இரவு 7-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மற்றும் இரவு மணி

8-00 முதல் நடுஇரவு 10-00 வரை : ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, கைங்கர்யங்கள், காலை மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்

5-00 முதல் 6-30 வரை : அபிஷேகம்

6-30 முதல் 8-00 வரை : சமர்ப்பணை

8-00 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை (தனி)

9-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்

இரவு 7-00 முதல 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மணி, முதலியன

8-00 முதல் இரவு 10-00 வரை ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,

10-30 ஏகாந்தசேவை (ஆர்ஜிதம் ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிககப்படுவர்.)

சிறுவர் பகுதி:

# இராமாயணம் காட்டும் நெறி

रामो विग्रवान धर्मः :

என்பது ஸ்ரீ வால்மீகியின் வாக்கு. இராமன் தர்மத்தின் ஸ்வரூபமானவன் என்பது இதன் கருதது. சத்தியமும், தர்மமுமே பெரியது என்று வாழ்ந்து காட்டிய வள்ளல், ஸ்ரீராமன்.

பித்ருவாக்கிய பரிபாலனம் செய்வதற்காக, நாடு விடுத்து காடு புகுந்தவன் காகுத்தன். அவன் நாட்டையும், காட்டையும் சமமாகவே பாவித்தான். வாழ்வும், தாழ்வும் அவனைப் பாதிக்கவில்லை. அவன் பதவியைத் துச்சமென மதித்தவன். அதனால் தான், அவன் கானகம் செல்ல வேண்டுமே என்று கவலைப்படவில்லை.

இராமனின் பட்டாபிஷேகத்திற்காக நாடே விழாககோலம் பூண்டு திகழ்கிறது. ஒவ்வொருவர் வீட்டிலும் ஏதோ தங்கள் வீட்டில்தான் விசேஷம் என்பது போல மகிழ்ச்சியில் திளைத்திருக்கின்றனர். ஆனால், இராமனோ, 'பூமி வெங்கானம் நண்ணி, புண்ணியத் துறைகள் ஆடி, ஏழிரண்டு ஆணடில் வா' என்று கைகேயி கூறக் கேட்டதும சற்றும் மனம பதைப்போ, பரிதவிப்போ அடையாமல், தனது அவதாரப் பணி முடிக்கப் புறப்பட்டு விடுகிறான். மகிழ்ச்சியையும, துன்பத்தையும் ஆன்றோர் சமமாகவே கருதுவர் என்பதற்கு இராமனின் இநதச் செயலே சான்று.

'நான் ஆணடால் என்ன எனது தம்பி பரதனுக்கு அரசபதவி கிடைத்தால் என்ன?' என்று கருதியவன். உண்மையில் பரதனுக்கு அரச போகமியம் கிடைப்பதில் அவன் மகிழ்ச்சியே அடைகின்றான். அதனால்தான் அவளது முகம் 'அன்றலர்ந்த (அப்போதுதான் பூத்த) செந்தாமரை மலரைப் போல' பிரகாசமாக இருந்ததாம்.

தந்தையின் ஆணைக்குக் கட்டுப்பட்டு, கானகம சென்றதோடு, தசரதன் கேகய நாட்டு மன்னனுக்குக் கொடுத்த வாக்கையும் இராமன் காப்பாற்றுகின்றான். கைகேயிக்கு பிறக்கும் பிள்ளைக்கே முடி சூட்டுவதாக மாமன்னன் கொடுத்த வாக்கும் இதனால் நிறைவேற்றப்படுகிறது.

இராமன் தம்பிக்காக நாட்டைத் துறக்கிறான் என்றால், பரதனோ தனக்குக் கிடைத்த பதவியை பெரிது என்று எணணாமல், 'மூத்த மகன் இருக்க இளையவன் அரசு கட்டில் ஏறுவது முறையோ?!' என்று இராமனிடம் தர்ம நியாயம் பேசுகின்றான்.



இராம காதையிலே ஸ்ரீ வால்மீகி தர்மத்தைப் போலவே, சத்தியத்திற்கும் முக்கியத்தும் தருகிறார். சத்தியத்தை தபஸுக்கு சமமாக உபநிடதங்கள் கூறுகின்றன. இராமனை எப்படியும் அழைத்துக் கொண்டு அயோத்தி திரும்பி விடுவது என்ற வைராக்கியத்துடன் சித்ரகூடம் வநத பரதன், இராமனிடம் வாதாடுகின்றான். 'இக்ஷ்வாகு வம்ச மரபுப்படி மூத்தமகன்தான் பட்டத்திற்குரியவன், நானோ இளையவன். ஏதும் அறியாதவன். ஆகவே, நீயே அரசாள ஏற்றவன்.' என்று வாதிடும் பரதனை, இராமன் சமாதானம் செய்து கூறுகின்றான். 'சத்தியமும், தர்மமும்தான் பெரியது. தசரத

திரு. ஆர். சுப்பிரமணியன்,
மதுரை.

மன்னன் இரண்டு வரங்கள் கொடுத்திருக்கிறார். அந்த வரத்தின் மூலம் சத்திய வாக்கை எப்படியும் பரிபாலனம் செய்யவே நான் காடு புகுந்துள்ளேன்' என்று கூறுவதன் மூலம், இராமன் சத்தியத்திலிருந்தும், தரும நெறியிலிருந்தும் சிறிதும் பிறழ மாட்டான் என்பதை உறுதிப்படுத்துகிறான்.

### பரதாழ்வார் :

இராமன் தர்ம நெறியில் உறுதியாக நிற்பவன் என்றால், பரதனும தான் கொண்ட கொள்கையிலிருந்து சிறிதும் வழுவாதவன். அதனால் தான், அண்ணன் இருக்கத் தான அரசாள்வது நியாயமல்ல என்று கருதிய பரதன், அண்ணலின் ஆணைக்குக் கட்டுப்பட்டவனாக, அரை மனதுடன் திரும்புகிறான. இராமனின் திருவடிகளைத தன் முடியில் தாங்கி, அவற்றையே அரியணையில் வைத்து, இராமனின் பிரதி நிதியாகவே ஆட்சி செய்து வருகின்றான்.

அண்ணலின் தியாகத்தைவிட, பரதனின் தியாகமே மிகவும் சிறந்ததாக விளங்குகிறது. பரதன் இராமனிடம் இவ்வாறு அன்பும், பக்தியும் பூண்டவனாகத் திகழ, இளையவன் இலக்குவனோ, தாஸானு தாஸனாக, இராமனுக்கு சேவை செய்வதையே தனது கடமையாக, விரதமாகக் கொண்டவன். அதனால்தான் அவன் 14 ஆண்டுகள் இராமன் காட்டில் வாசம் செய்த போது 'மெய் வருத்தம் பாராது, கண் துஞ்சாது கர்மமே கண்ணாக' அண்ணலுக்கும், அன்னைக்கும் பாதுகாப்பாக இருந்து தொண்டு புரிந்தான்.

சகோதரர்கள் எப்படி அன்பும், பாசமும் கொண்டு வாழ வேண்டும் என்பதற்கு இராம, லட்சுமண, பரதனே சான்றாக விளங்குகின்றனர்.

### கைகேயி :

பரதனைவிட ஸ்ரீஇராமனிடம் தான் கைகேயிக்கு அன்பும், பாசமும் அதிகம். அப்படி இருக்க அவனைக் காட்டுக்கு அனுப்ப அவள் எப்படி மனம் துணிந்தாள்? சகவாச தோஷம் தான்.

நாளை இராமனின் மகுடாபிஷேகம். அயோத்தி மாநகரமே ஆனந்தக் களிப்பில் ஆழ்ந்திருக்கிறது. அவ்வேளையில் தானும் மகிழ்ச்சிக் கடலில் திளைத்திருந்தபோது, நல்லவளான அவளது மனதை கலைத்து விட்டது கூனியே அன்றோ?

வாழ வேண்டிய அவள் வாழ்விழந்தாள் என்றால், மங்கலப் பொருள்களை அவள் அழிக்க முற்பட்டதுதான் காரணம். நெற்றியில் இட்டிருந்த மங்கல திலகத்தை அழித்தாள். கூந்தலை அவிழ்த்துவிட்டாள். அலங்கோலமாகப் படுத்திருந்தாள். எதையெல்லாம் குல மகளிர் செய்யக் கூடாதோ அதையெல்லாம் செய்தாள். எதை கற்பின் மாதர் அழிக்கக் கூடாதோ அதை அழித்தாள். அவள் கைம்பெண் ஆனாள்.

தருமனும் இதே போல, அறவழி நின்ற அவன், கண நேரம் அதை மறந்து, சகுனியின் பேச்சைக் கேட்டு சூதாடி, நாட்டை இழந்தான்; தனது நாயகியை இழந்தான்; நலன்களை எல்லாம் இழந்தான்.

நல்லவர்கள் ஒரு சிறிது தவறு இழைத்தாலும் அதன் விளைவுகள் மிகப் பயங்கரமானதாக இருக்கும் என்பதையே இது உணர்த்துகிறது.

நிகழ்ந்ததை அறிந்த பரதன், இத்தனை அவலத்துக்கும் காரணம் தனது தாயே என்று கடிந்து கொள்கின்றான். அவள் வயிற்றில் தான் பிறந்ததற்காக வருந்துகின்றான். ஆனால், குகனோ, 'எனக்கு இராமனை தரிசிக்கும் பேறு கிட்டியது' என்று அவனை வாயார வாழ்த்துகின்றான்.

'பரதனின் தியாகத்தை அறிந்த குகன், ''ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ' என்று பரதனைப் புகழ்கின்றான்.

## வால்மீகி

வடமொழியில் ''இராமாயணம்'' என்னும் இராமர் காவியத்தை எழுதியவர் வால்மீகி ஆவார். இவர் ஆரம்பகாலத்தில் காடுகளில் வாழ்ந்து வழிப்போக்கர்களின் பொருட்களை கவர்ந்து வாழ்க்கை நடத்தி வந்தார். நாரதமாமுனிவருக்கும் வால்மீகியால் சோதனை ஏற்பட நாரதர் வால்மீகிக்கு உபதேசம் செய்து நல்வழி ஒழுகச் செய்தார். அதுகாலை இராமபிரான் சீதாப் பிராட்டியை குசலவர்களுடன் காட்டுக்கு அனுப்பியபோது அவர்களை ஆதரித்த வேண்டியன செய்தவர் இவரே. இவர் கடுந்தவம் புரிந்திருந்த போது இவர்மீது புற்று வளர்ந்தது என்றும் அந்தப் புற்றினின்றும் மீண்டும் இளமையுடன் வெளிப்பட்டமையால் இவருககு (வால்—இளமை. மீகி—மீளுதல்) வால்மீகி என்ற பெயர் ஏற்பட்டது என்றும் கூறுவர். இவரை வருணனின் புத்திரன் என்றும் உரைப்பர். அதன்பொருட்டு இவருக்கு ''பிராசேதசர்'' என்ற பெயரும் உண்டு. என்பர். அவர் சீதாப்பிராட்டியின் மூலம் இராமபிரானின் சரித்திரத்தை அறிந்து இராமகாவியம் படைத்தார். இவரது நூலுக்கு 'வால்மீகி இராமாயணம்' என்று பெயர்.

ஆதாரம் வால்மீகி இராமாயணம்.
தொகுப்பு: முடிவை. முத்து-கோவிலபட்டி.

### சரணுகத ரக்ஷகன் :

இராமன் தன்னிடம் அடைக்கலம் என்று சரண புகுந்தவர்கள் யாராயினும் அவரிடம் அன்பு கொண்டு காத்து ரக்ஷிக்கின்ருன். 'உன்னைக் காப்பாற்றுகிறேன்' என்று சுக்ரீவனுக்குக கொடுத்த வாக்கை காப்பதற்காக 'வாலியை மறைந்து நின்று கொன்ருன' என்ற அபவாதத்தையும் ஏற்கிருன்.

ஆனுல், தர்ம ஸ்வரூபியான இராமன் அதர்ம வழியில் நடப்பாஞ? வாலி தர்ம விரோதமாக அவனுடைய தம்பியின் மனைவியை அபகரித்துக் கொண்டதால்தான் அவனை இராமன் கொல்கிறுன.

வாலிக்கு மமதை தலைக்கு ஏறி அவன் கண்களை மறைத்து விடுவதால், தன்முன் நிறபவன் தர்மத்தின் நாயகன், உயர்குலச் செம்மல் என்பதை அறிய மாட்டாதவனுக, முதலில் இராமனை பலபடி வசை பாடினுலும், அவனுக்கு மெய்ஞ்ஞானம் ஏற்பட்டு, இராமன் இன்னுர் என்ற உண்மையை உணர ஆரம்பித்ததும்,

''ஆனிபோம் வேளைவாய் ஏவுகூர்
வாளியால்
அறிவு தந்தருளினுய்''

என்று சாகும் தருவாயில், ''இராமன் அம்பால் தன்னை எய்தி, அறிய ஞானத்தைத் தந்தருளினுன்; அதனை முழுமையாக அனுபவிக்கக்கொடுத்து வைக்கவில்லையே' என்ற வேதனையுடன் ஆவி துறக்கின்ருன்.

விபீஷணன் தர்மத்தின் வழி நின்றவன். அதனுல்தான், இராவணனின் போககு பிடிக்காமல், இராமனை வந்து சரணடைகின்ருன். அவனை ஏற்றுக் கொணட இராமன், 'நின்னெடும் எழுவராஞேம்' என்று பெருமகிழ்வு எய்துகிருன். தன்னைச் சரண் அடைந்தவர்களிடம் இராமன் பரம கருணை காட்டுகின்ருன்.

'பகைவனுக்கு அருள்வாய் நன்னெஞ்சே' என்று பாரதி பாடியபடி, எதிரிகளிடமும் அன்பும், பரிவும் காட்டிய அண்ணல், தம்பியரை இழந்து, அணிகலன்களை இழந்து, ஆயுதங்களை இழந்து நிராயுதபாணியாக போர்க்களத்தில் நிற்கும் இராவணனை, இராமன் நினைத்திருந்தால் ஒரு நொடிப்பொழுதில் மாய்த்திருக்க முடியும். ஆனுல், அவனிடம் மனம் இரங்கி, 'இன்று போய் நாளை வா' என்று போக விடுத்தான்.

இராவணன் மரணத் தருவாயில் இருக்கின்ற சமயம். இராமன் தன் தம்பி இலக்குவனைப் பார்த்து, 'இராவணன் சிறந்த சிவபக்தன். நல்ல முறையில் ஆட்சி செய்த சீராளன். அவனிடமிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டியது நிறைய இருக்கிறது. அவனை சந்தித்து சம்மதம் கேட்டு வா' என்று அவனிடம் தனது தம்பியை அனுப்புகின்ற பரம கருணையை எவ்வாறு புகழ்வது.

### அனுமன் :

எஜமான விசுவாசத்துக்கு அனுமனைக் குறிப்பிடுவதுண்டு. அவனைப் போல இராமனிடம் விசுவாசம் கொண்டு சேவை செய்தவர்கள் யாருமில்லை. அதனுல்தான், இன்னும் அவன் நம் அனைவரது உள்ளங்களிலும் உறைகின்ருன். அவனைத் தெய்வமாக வணங்கி வருகின்ருேம்.

### கற்பின் தெய்வம் :

'கற்பின் தெய்வம் கனி நடம் புரியக் கண்டேன்' என்று அன்னையை அசோக வனத்தில் கண்டு வந்த அனுமன் கூறுகிருன். சீதை எப்படி இருக்கிருள்? இராமன் இருக்கின்ற இடமே அயோத்தி என்று, அவனுடனேயே கொடிய விலங்குகள் வாழும் காடு சென்று, பல இன்னல்களையும் இன்முகத்துடன் தாங்கிக் கொண்ட கற்பின் செல்வி.

அண்ணலைப் பிரிந்து அசோக வனத்தில் சிறையிருந்த போது, இராமனது நினைவாகவே தூய தவக்கோலம் பூண்டு தவமியற்றி வருகின்றாள். இராவணன் அவளை அணுகி தொல்லை தந்த போது, 'என் சொல்லினால் சுடுவேன், அது தூயவன் வில்லின் ஆற்றலுக்கு மாசு என்று வீசினேன்' என்று சூளுரைக்கின்றாள்.

'இராவணா! நீ எனக்கு ஒரு பொருட்டன்று. நான் நினைத்தால் உன்னை நொடியில் பிடி சாம்பலாக்கிவிட முடியும். ஆனால், என் அண்ணல், என் இதய தெய்வம் வந்து என்னை சிறை மீட்டு என்னை அழைத்துச் செல்வதே எனக்குப் பெருமை. அதனால் தான் பேசாமல் இருக்கின்றேனே அல்லாமல் கையாலாகாதவள் என்று நினைத்து விடாதே' என்று சாடுகிறாள்

அனுமன் போய் அசோக வனத்தில் கற்பின் தேவியைக் கண்டதாக இராமனிடம் வந்து கூறுகின்றாள் இதைவிடவா அவருக்கு நற்சான்று வேண்டும்.

ஆனால், அந்த சீதையைத்தான் இராமன் அக்னி பிரவேசம் செய்யச் சொல்கின்றான். 'மன்னன் வருவான்; என் கலி தீர்த்து, என்னை மீட்டுச் செல்வான்' என்று ஆவலோடு காத்திருந்தவளுக்கு, 'தீ புகுவாய்' என்று அண்ணல் ஆணையிட்டதும் சற்று வெலவெலத்துத்தான் போனாள். ஒரு கணம்தான். தான் காண வேண்டிய தெய்வத்தைத் தரிசித்தாகி விட்டது. இனித் தனக்கு என்ன வேண்டும் என்று எண்ணியவளாய், உறுதி பூண்டவளாய் அண்ணலின் ஆணைப்படி தீப்பாய்கின்றாள்.

இராமனுக்குத் தெரியும் சீதை கற்புக்கரசி என்று. ஆனால், மாற்றானின் சிறையில் இருந்தாள் என்று யாரும் அபவாதம் பேசக் கூடாது என்பதற்காக, சிறந்த ஜனநாயகவாதியான இராமன் அன்னையை அக்னி பிரவேசம் செய்யச் சொல்கிறான்.

அக்னி சாட்சியாக மணந்தவளை, அதே அக்னி சாட்சியாக கற்பின் தெய்வமாக ஏற்றுக் கொள்கிறான்.

## ஒரே சொல்! ஒரே வில்! ஒரே இல்!

இராமன ஒரே சொல், ஒரே வில், ஒரே இல் (மனைவி) என்று வாழ்ந்த உத்தம சீலன். ஆயிரம் மனைவிகளோடு வாழ்ந்த தசரதனின் மகனாகப் பிறந்த இராமன் 'ஒரே மனைவி' என்ற குறிக்கோளுடன் வாழ்ந்து புரட்சி செய்தான். அதனால்தான் 'இப்பிறவியில் இரு மாதரை என் சிந்தையாலும தொடேன்' என்று சூளுரைத்தான.

கொடுத்த வாக்குறுதியை காப்பதில் இராமன் சிறந்தவன். 14 ஆண்டு காலம் கழித்து வருவேன் என்று பரதனுக்குக் கொடுத்த வாக்கை நினைவில் கொண்டு, அனுமனை அனுப்பி பரதனைத் தீப்புகாமல் காப்பாற்றியவன; அவனை வாழ வைத்த செம்மல்.

நாமோ கொடுத்த வாக்கை மறு கணமே மறந்து விடுகிறோம்.

மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனும் காமம், கோபம், மோகம், லோபம், மதம், மாச்சரியம் என்ற அறுவகை தீயகுணங்களையும்விடுத்து, சத்புத்ரனாக, நல்ல சகோதரனாக, நல்ல கணவனாக, நேர்மையாளனாக, நல்ல நண்பனாக, நம்பிக்கை, நல் நோக்கம, நற்பேச்சு, நற்செய்கை, நன் முயற்சி, நல்வாழ்க்கை ஆகிய சீரிய மாண்பு நலன்களைக் கொண்டவர்களாக வாழ வேண்டும் என்பதற்கு இராமாயண காவியமே நற்சான்றாகத் திகழுகிறது.

அதனால் தான்,'

यावत स्थास्यन्ति गिरय: सरितश्च महीतले।
तावद्रामायण कथा लोकेषु प्रच रिष्यति ।।

என்று வால்மீகி கூறுகிறார். இது பாலகாண்டம் 2-வது ஸர்க்கம், 36-வது ஸ்லோகத்தில் வருகிறது. 'இவ்வுலகில் எவ்வளவு காலம் மலைகள் இருக்கின்றனவோ, எத்தனை காலம் நதிகள் ஓடிக் கொண்டிருக்கின்றனவோ, அவ்வளவு காலம் வரையில் இந்த இராமாயணம், எல்லா மக்களுக்கும் மகிழ்ச்சியையும் திருப்தியையும் அளித்துக் கொண்டு, புத்தியை விஸ்தரித்துக் கொண்டு நீடித்து இருக்கும்' என்பது இன்றளவும் உண்மை தானே.

பார்வதி தேவி பரமனிடம் கேட்கின்றாள். இந்தக் கலியுலகில் பாமர மக்கள் உய்ய வழி என்ன? என்று எளிதில் முக்தியை அடைய வழி கேட்ட அன்னைக்கு பதில் உரைக்கின்றான் பரமன்.

'' ஸ்ரீராம ராம ராமமேதி ரமே ராமே
மனோ ரமே
ஸஹஸ்ர நாம தஸ்துல்யம் ராம நாம
வரானனே!''

'ராம, ராம' என்று இரு தடவை சொல்லி வந்தால் அது ஆயிரம் நாமத்தைச் சொன்ன பலனுக்குச் சமம் என்று பகவான் கூறியது முற்றிலும் உண்மை.



## மகான்கள் நிலை நாட்டியவை

திரு. எம். கே. ஸ்ரீநிவாசன், பி.ஏ., சென்னை—39.

| | |
|---|---|
| ஏகபத்தினிவிரதம் | — இராமர் |
| பற்றற்ற கருமம் | — கிருஷ்ணர் |
| இல்லற ஒழுக்கம் | — திருவள்ளுவர் |
| ஆத்ம ஞானம் | — சங்கரர் |
| பக்தி | — சைதன்யர் |
| சத்தியாக்கிரகம் | — பிரகலாதன் |
| சமரச சன்மார்க்கம் | — இராமலிங்க சுவாமிகள் |
| கொடை-தர்மம் | — கர்ணன் |
| மானம் | — பீமசேனன். |
| அகிம்சை | — புத்தர் |
| சத்தியம் | — அரிச்சந்திரன் |
| சகோதரத்துவம் | — நபிநாயகம் |
| அன்பு | — இயேசுநாதர் |



# பாஸகவியின் இராமாயணம்

''ஸூத்ர தார க்ருதாரமபை:
தாடகை: பஹுபூமிகை:
ஸ பதாகை: யச: லேபே
பாஸ: தேவகுலை' இவ: ''

ஹர்ஷ சரிதம் மஹாகவி பாஸரை இப்படிப் புகழ்ந்து பேசுகிறது: பல கோபுரங்களும் கொடிகளும உடைய பெரிய கோவில்களைக் கட்டி முடிக்கும் சிற்பிகள் சாசுவதமான அழியாத கீர்த்தியை அடைவது போல் பாஸகவி மிகச் சிறநத பாத்திரங்களைக கொணட நாடகங்களைப் படைத்ததன் மூலம் அழியாப் புகழ் பெற்றுவிட்டார் என்கிறது.

மஹாகவி பாஸர் ஸ்ரீமத் ராமாயணத்தை மூன்று நாடகங்களாக எழுதி உள்ளார. அவை யக்ஞ பலம், பிரதிமா நாடகம், அபிஷேக நாடகம் என்பதாகும

ஸீதா விவாஹம், யாக ஸம்ரக்ஷணம ஆகிய ராமாயணத்தின் பால காண்டப் பகுதிகளை யக்ஞபலம் என்ற நாடகம் கூறுகிறது.

பிரதிமா நாடகம் ராமன் வனத்திற்குச் சென்றது, பரதன் ராமனிடம பாதுகைகளைப் பெறுவது, ஸீதாபஹரணம், ஸுகரீவஸக்யம் இவற்றைப் பறறி விரிவாகக் கூறுகிறது.

அபிஷேக நாடகம் ஸுக்ரீவ பட்டாபிஷேகம், விபீஷண பட்டாபிஷேகம், ஸ்ரீராம பட்டாபிஷேகம் ஆகிய மூன்று பகுதிகளையும் கொணடதாகும்.

ஆதிகவி வால்மீகியின் ராமாயணம் என்னும் பாற்கடலைப் பருக முயன்ற கம்பப்பூனையின் அவையடக்கத்தை மெய்யாகவே பயன்படுத்தி பாஸகவியின் காவியத்தைச் சிறிதளவு பருக முயல்வோம்.

---

திப்பிராஜபுரம் ரவீந்திரன் பி.ஏ,

---

முதன்முறை தசரதரால் ஏற்பாடு செய்யப்பட்ட ராமனது பட்டாபிஷேகத்தில் நகர்வலம் வருவதற்காக ரதம் ஸித்தமாக நின்றது. வெண்குடையும், சத்ரசாமர உபசாரங்களும் சூழ ராமன் ரதத்தில் ஏறினர். பேரிகைகளின் ஒலி விண்ணைப் பிளந்தது. பட்டாபிஷேக மண்டபத்தில், யாக வேதிகையில் வஸிஷ்டர் அமர்ந்து இருந்தார். லக்ஷ்மண சத்ருக்னர்கள் பட்டாபிஷேகத்திற்கான தீர்த்த கலசங்களை எடுத்துக்கொண்டனர்.

அப்போது திடீரென்று ஸுமந்திரர் ஓடி வந்து தசரதர் காதில் ஏதோ கூறினர். உடனே பட்டாபிஷேகம் தடைப்பட்டு நின்றது. இந்த விஷயத்தை அறியாத ஸீதா தேவி வேடிக்கைக்காக, மரவுரியை உடுத்திக்கொண்டு தோழிகளைச் சிரிக்க வைத்துக்கொண்டு இருந்தாள்.

அப்போது, ஸீதாதேவியின் அந்தப்புரத்தில் நுழைந்த ராமன் ஸீதையிடம் தமது பட்டாபிஷேகம் தடைப்பட்ட விபரதைத் தெரிவித்தார்.

இதைக் கேட்ட ஸீதாதேவி, ராமனைப் போலவே முகத்தில் சிறிதும்



படம: பாபுநாத்-திருப்பதி.

சலனம் இன்றி, ''இதில் எனக்கு மிகவும் மகிழ்ச்சியே. தாங்கள் ராஜ்யத்தை ஏற்றால், இக்ஷ்வாகு குல வழக்கப்படி தாங்கள் தந்தையான தசரதர் எங்கே வானப்பிரஸ்தம் அனுஷ்டிக்க நம்மை விட்டுக் காட்டிற்குச் சென்று விடுவாரோ என்று கவலைப்பட்டேன். தற்போது அந்தக் கவலை நீங்கியது'' என்று பதில் கூறினன்.

சற்று நேரத்திற்கெல்லாம் ஒரு அரச சேவகன் ராமனிடம் ஓடி வந்து, ''பேராசை பிடித்த கைகேயி பரதனுக்கு ராஜ்யாபிஷேகம் செய்ய வேண்டும் என்று அரசரிடம் பிடிவாதம் செய்கிறாள். தங்களுக்கு ஆபத்து வந்து விட்டது'' என்று கூறினன்.

தமக்கே உரிய குணங்களால் சிறந்து விளங்கும் ராமன் உடனே நிதானமாக,

'' ஜல்கே விபணிதம் ராஜ்யம்
புத்ரார்த்தே யதி யாச்யதே
தஸ்யா லோபே அத்ர ந அஸ்மாகம்
ப்ராதுரு ராஜ்யாபஹாரிணும் ''.

என்று கூறினர். அதாவது, விவாஹ காலத்தில் விர சுல்கமாக கைகேயிககு அளிக்கப்பட்ட ராஜ்யத்தை அவள் தன் புத்திரனுக்குக் கொடுக்கும்படி கேட்பது பேராசையா? அல்லது தன் தம்பிக்குக் கிடைக்க வேண்டிய ராஜ்யத்தை நான் ஏற்க சம்மதித்தது பேராசையா?' என்றுகேட்டு 'இனி என் அன்னை கைகேயியை யாரும் என் முன் குறை கூறக் கூடாது' என்று கூறி அனுப்பி விட்டார்.

(கைகேயியின் திருமணக் காலத்தில் அயோத்திக்கு அருகில் உள்ள சில பகுதிகளைக் கேகய மன்னர் தசரதருக்குச் சீதனமாகக் கொடுத்திருந்தார்).

அப்போது லக்ஷ்மணன் கையில் வில்லேந்தியவனுகக் கண்களில் கனல் பறக்க ராமனை வந்தடைந்தான். 'தங்களிடமிருந்து ராஜ்யத்தை அபகரித்தது மட்டுமின்றிக் கைகேயி நம் தந்தையிடம் 'தங்களுக்குப் பதினன்கு வருடம் வனவாஸத்தையும் வரமாகப் பெற்றுவிட்டாள். இதோ என் வில்லின் வலிமையால் தங்களைச் சக்ரவர்த்தியாக்குகிறேன். உத்தரவு இடுங்கள்' என்று கொதித்து எழுந்தான்.

ஸ்ரீராமன் அவனைச் சமாதானப் படுத்தி, 'உன் பாணத்திற்கு இலக்கு யார்? நம் தந்தை முன்பே அளித்த வரத்தின்படி தனக்கு உரிய சொத்தைக் கேட்ட தாயான கைகேயியா? கொடுத்த வாக்கை மீற முடியாமல் ஸத்தியத்திற்காகக் கட்டுப்பட்டு நிற்கும் தந்தை தசரதரா? அல்லது ஒரு பாவமும் அறியாது பன்னிரண்டு வருட காலமாக மாமன் வீட்டில் வசித்து வரும் தம்பி பரதனு? இந்த மூன்று பாபங்களில் நீ எதைச் செய்ய விரும்புகிறாய்?' என்று கேட்டார்.

மேலும், 'இந்தச் சிறு விஷயத்திற்காக நம் தந்தை துயர் உறுவானேன். நான் வனத்திற்குச் செல்ல நிச்சயித்து விட்டேன்'' என்றார்.

பிறகு ஸீதாதேவியும் ராமலக்ஷ்மணர்களும், கௌஸல்யை, ஸுமித்ரை ஆகியோரைச் சமாதானப்படுத்தி விட்டு, கைகேயியின் மாளிகை சென்று தந்தையை வணங்கி, மரவுரி தரித்து வனத்திற்குச் சென்று விட்டார்கள்.

ராமனை வனத்தில் விட்டுத் திரும்பிய ஸுமந்திரரைக் கண்ட தசரதர் துக்கத்தால் பரிதவித்தார். ஓரிரவில் மரணத்திற்குச் சற்று முன்பு தசரதர், 'திலீபரே! வாருங்கள்! ரகு மஹாராஜாவா? அமரவேண்டும்! என் பிதாவான அஜ மஹாப்பிரபுவா? தங்களைப் பார்த்து எவ்வளவு ஆண்டுகள் ஆகி விட்டன? ரதம் தயாராக உள்ளதா? இதோ ஆசமனம் செய்துவிட்டு உங்களுடன் கிளம்பி விடுகிறேன். எல்லோரும் சேர்ந்தே போவோம்' என்று புலம்பி, 'ராமா, ராமா' என்று ராம நாமத்தை உச்சரித்தபடியே உயிர் இழந்தார்.

இச்செய்தியை தூதுவர்கள் விரைவில் பரதனிடம் அறிவிக்கக் கிளம்பினார்கள்.

பாஸகவி தசரதர் மரணத்தின் போது சத்ருக்னன் அருகில் இருந்ததாகக் குறிப்பிடுகிறார்.

பரதனிடம் சென்ற தூதுவர்கள் தசரதரின் மறைவைப் பற்றி அவனிடம் எதுவும் தெரிவிக்காமல் அயோத்திக்கு அழைத்து வந்தனர். திரும்பி வந்த பரதன் நீண்ட நாள் கழித்து வருவதால் நல்ல நேரம் பார்த்துத்தான் அயோத்திக்குள் நுழைய வேண்டும் என்று கருதி நகருக்கு வெளியில் தங்கினன்.

அந்தக் காலத்தில் இக்ஷ்வாகுகுல மன்னர்கள் யார் இறந்தாலும் நகருக்கு வெளியில் உள்ள ஒரு மாளிகையில் உடனே அவர்களது உருவச் சிலைகளைச் சமைத்து வைப்பது வழக்கம்.

யதேச்சையாக அந்த மாளிகைக்குள் பிரவேசித்த பரதன் அங்குத் தன் தந்தை தசரதரின் சிலையும் இருப்பது கண்டு பெரும் அதிர்ச்சி அடைந்தான். மந்திரி பிரதானிகளை விசாரித்து நடந்த நிகழ்ச்சிகள் அத்தனையும் அறிந்து கொண்டான். அதோடு ராமனைத் திரும்பி அழைத்து வர எண்ணி அங்கிருந்தே சித்ர கூடத்திற்குக் கிளம்ப நிச்சயித்தான். என்றாலும் தன் தாயைச் சந்தித்து அவளது செயலுக்காக நிந்தித்தான்.

ஆனால் பரதன் தன்னை ஏசியதைச் சிறிதும் லட்சியம் செய்யாத கைகேயி 'பரதா! நீ உன்னை வெகு புத்திமான் என்று நினைத்துக் கொண்டு என்னைக் கேட்கும் கேள்விகளுக்கு எல்லாம் பதில் உண்டு. ஆனால் அதைச் சொல்ல வேண்டிய

காலமும் நேரமும் வரும்போது அவற்றை என்னிடமிருந்தே நீ கேட்பாய். அதுவரையில சற்றுப் பொறுமையாக இரு' என்றுள்.

விரைவில் சித்ர கூடத்தை அடைந்த பரதன் ராமரின் பாதங்களில் வணங்கிப் புலம்பி அழுதான். பலவாறு வற்புறுத்திக் கூறியும் ராமன் அரசை ஏற்க மறுத்தார். பரதனையே ஆளவேண்டும் என்றும் கடுமையாக உத்தரவு இட்டார். மறுக்க இயலாத பரதன் ஸ்ரீராமனது பாதுகைகளைப் பெற்று வந்து தவசியைப் போல நந்திக் கிராமதநில் இருந்தபடியே ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தான்.

வனத்திலும் ராமன் தமது வனவாஸ காலத்தைத தொடர்ந்து கழிததுசகொண்டு இருநதார்

இவவிதம் இருக்கையில் வனத்தில் ஒரு நாள் ஸ்ரீராமன் கவலையுடன் காணப்பட்டார். கணவனது முகவாட்டத்தைக் கண்ட ஸீதா தேவி அவரது கவலையின் காரணத்தை வினவினுள். அதற்கு ராமன் ''ஸீதே! நாளைகரு எனது தந்தையின சிராத்த தினம. அதை நல்ல முறையில் நடத்த விரும்புகிறேன. எப்படி ஆகுமோ அறியேன்'' என்றுர் அதற்கு தேவி 'அயாத்தியில் தங்கள் தம்பி பரதன் எப்படியும் உயர்ந்த முறையில் செய்து விடுவார். நாமும் இங்கு வனத்தில் இயன்ற அளவு சிறப்பாகவே நடத்தி விடுவோம். ஏன் வீண் கவலை'' என்றுள. சீதை தசரதரின் சிரார்த்தத்திற்கு சிரத்தையுடன் செய்வதுதான் அவசியம் என்றும் குறிப்பிட்டாள்.

இவ்விதம் அவர்கள் உரையாடலின்போது, ஸீதையின் அழகைப் பற்றியும், அவள் வனவாசத்திற்கு கணவனுடன் வந்திருப்பதையும் கேள்வியுற்ற ராவணன் தேவியைக் கவர்ந்து செல்ல எண்ணி ஆசிரம வாயிலை அடைந்தான். ''அதிதி வந்து இருக்கிறேன், உள்ளே யார்?'' என்று குரல் கொடுத்தான். அதைக் கேட்ட ராமர் வெளியில் வந்து நல்வரவு கூறி அதிதி அமர ஆஸனம் அளித்தார். பாத பூஜைக்கு தீர்த்தம் கொண்டுவர ஸீதையைக் கூப்பிட்டார். ஆனுல் ராவணத் துறவி, இத்தகைய எந்த மரியாதையும் தனக்குத் தேவையில்லை என்றும் நல் வரவு கூறினுலே போதும் என்றும ராமனிடம் கூறினுன். மேலும்,

இயம் ஏகா ப்ருதிவ்யாம் ஹி மானு
ஷீணும் அருந்ததி |
யஸ்யா பர்த்தா இதி நாரீபி ஸத்க்ருத:
கத்யதே பவாந்

என்று குறிப்பிட்டான். அதாவது, மானிடப் பெண்களுள் அருந்ததி ஒருவளே உத்தமி என்பது பிரஸித்தம உன மனைவி சீதையும இந்த அருநததிக்கு சமானமானவள் ஆதலால் அந்நிய புருஷனுககு பாதத்தை அலம்பி பூஜிப்பது தவறு என்றும் குறிப்பிட்டான். உடனே ராமன் தான் மட்டும் பாத பூஜை செய்ய முன்வந்தார். ராவணன் அவை எல்லாம் தேவையில்லை என்று கூறி ராமனை அமருமபடி உத்தரவிட்டான். (இதன் மூலம் பாஸகவி ராவணனது மனோநிலை நல்ல விதத்திலும் தீய விதத்திலும் மாறிமாறிச் செயல்படுவதைக காட்டுகிறுர்.) பிறகு முனிவேடம் தாங்கிய ராவணன் தான் மனுதர்மம, மாஹேசுவரரின் யோக சாஸ்த்ரம், ப்ருஹஸ்பதியின் அரசியல் சாஸத்ரம், மேதாதிதியின தர்க்க சாஸ்த்ரம், ப்ரசேதஸின் ச்ராத்த கல்பம் ஆகிய எல்லாவற்றையும் கற்றதையும், யார்யார் தனக்கு குரு என்பதையும் எடுத்துரைத்தான்.

சிராத்தகல்பம் படித்திருப்பதாக ராவணன் கூறியதும் ராமன், ''நாளைய தினம் என் பிதாவுக்கு சிராத்த தினம். தற்போது தங்கள் வரவிற்கு நான் கொடுத்து வைத்திருக்க வேண்டும். பிதுர்களைத் திருப்திப்படுத்தவல்ல உயர்ந்த பொருட்கள் எவை என்று தேவரீர் கூறியருள வேண்டும்'', என்று கேட்டுக் கொண்டார். ராவணன், ''ச்ராத்தத்திறகுரிய திரவியங்களில், முதலாவதாக எள்ளும், தர்ப்பமும் என்றும், பிறகு செந்நெல் என்றும், மீன்களில் மஹா சபரம் என்ற வகையும், பறவைகளில வாத்ராஸனம் என்ற பறவை வகையும், மிருகங்களில் நீர் யானையுமாகும் என்று கூறி, ''இவை யாவற்றையும விட சிறந்த பொருள் ஒன்று உண்டு. அது கிடைத்தற்கரியது. எனவே நான் அதைப் பற்றிக் கூறப்போவதில்லை நீ வீணுக மனக்குறைப்படுவாய்!'' என்று கூறி முடித்தான். ராமன் வற்புறுத்திக் கேட்கவே, சம்போ, சங்கரா என்று கூறிவிட்டு 'கிளம்புவதுபோல் பாசாங்கு செய்தான். ராமன் போலித் துறவியான ராவணன் முன் போய் நின்று மன்றுடிய பின் மனமில்லாமல் கூறுவதுபோல் வருத்தத்துடன் கூறத் தொடங்கினுன். அதாவது,'வைடூர்யவர்ணமான முதுகும, உருக்கிய தங்கம் போன்ற விலாப்புறங்களையும் உடைய காஞ்சன பார்ச்வம் என்ற ஒருவகைப் பொன் மானகள் இமயமலையில் ஒரு பகுதியில் உண்டு அது பூமியில் விழுநத தண்ணீரைக் குடிக்காது. விண்ணிலிருந்து விழும் நீரையே பருகும். அதன் வேகத்திற்கொப்ப எந்த மிருகங்களாலும் ஓடித் துரத்த இயலாது. மனிதர்கட்கு அது பார்ப்பதற்கே அரியது. நைமிசாரண்ய முனிவர்கள் மனதால் நினைத்த மாத்திரத்தில் அந்த மான்கள் அவர்களமுன் தோன்றித் தானுக தன் உயிரை மாய்த்துக்கொண்டு அவர்களது ச்ராத்த கர்மத்திற்குத் தன் உடலைப் பயன்படும்படி செய்து கொள்ளும் தெய்விகத் தன்மை வாய்ந்தன. எனவே நீ அந்த மான் கிடைக்கவில்லையே என்று குறைப்பட வேண்டாம் என்றுதான், நான் அதை உன்னிடம் கூறவில்லை' என்று கூறினுன்.

அப்போது ராவணன் கட்டளைப் படி மாரீசன் பொன் மான் உருக் கொணடு ஆசிரம எல்லையில் திரிந் தான். உடனே ராவணன் "ராமா! நீ அதிருஷ்டசாலியே. உனக் காகவே இந்த மான் இங்கு வந்திருக் கிறது என்று கருதுகிறேன. உடனே தாமதியாது அதைப் பிடித்து வா!" என்று உத்தரவு இட்டான். ராம னும் எல்லாம் முனிவரின் அருள் என எண்ணி வில்லும் அம்பும தரித்து மானைப் பிடிக்க வெகு தூரம் ஓடினர். அப்போது பாஸகவியின் பிரகாரம் லக்ஷ்மணர் ஆசிரமத்தில இல்லை. தீர்த்த யாத்ரை முடித்துக் கொண்டு திரும்பி வநதுள்ள குலபதி என்ற முனிவரைத் தரிசிதது வருவதா கக் கூறி நெடுந்தூரம் வனத்தினுள் சென்று இருந்தான். இதுவே தக்க தருணம் என எண்ணிய போலித துறவி தன சுய உருவததை எடுத துக்கொண்டு சீதையை அபஹரித்துக கொணடு விண்ணில பறந்தான. வழியில் போரிட்ட ஜடாயுவையும் மரணகாயப்படுததிவிட்டு இலங்கை நோக்கிக் கிளம்பிச் சென்றான்.

ராம லக்ஷ்மணர்கள ஸீதையை ஆச்ரமத்தில் காணாது எங்கும் தேடி அலைந்தனர். பிறகு ஜடாயுவை சந் தித்துக் கபந்தனைக் கொன்று சுக்ரீவ னது நட்பை பெற்றனர். ராமர் வாலியை வதம் செய்து சுக்ரீவனை வானர அரசனாக்கி மழைக் காலத்தைக் கிஷ்கிந்தையில் கழித்து வந்தார். அப்போது பரதனால் ராம னது நிலைமையை அறிந்து வரும்படி அனுப்பப்பட்ட ஸுமந்த்ரர் எல்லா விஷயங்களையும் அறிந்து சென்று, ராமன் கிஷகிந்தையில் வருந்திக் காலம் கழிப்பது வரை கூறினர். இதைக்கேட்ட பரதன் சோகத்தால் மூர்ச்சை அடைந்தான். மூர்ச்சை தெளிந்ததும் அருகில் நின்றிருந்த தன் தாயான கைகேயியை நிந்தித் தான். உடனே கைகேயி சுமந்த் ரரை நோக்கி "எனது செயலுக்கு உரிய காரணத்தை இனி மறைத்துப் பயனில்லை. நான் கூறினால் குழந்தை பரதன் நம்பமாட்டான். நீங்களே உங்கள் வாயால் கூறி விடுங்கள்" என்றாள். உடனே பர தனிடம சுமந்திரா, தசரதர் முனி குமாரன் ஒருவனை முன்பு தெரியா மல் மறைந்து நின்று கொனறதால், தசரதருக்கு புத்ர சோகத்தால்தான் மரணம என்று ஒரு முனிவர் சாப மிட்டதையும், இந்த சாபம் தனக கும், தசரதர், கைகேயி, வஸிஷ்டர் ஆகிய நால்வருக்கு மட்டுமே தெரி யும என்றும் கூறினர். எனவே தச ரதர் உடலில் மிகவும் தளர்ச்சி ஏற பட்டதாலும், சில உத்பாதங்கள தோன்றியதாலும், கைகேயி புத்ர சோகத்தால மரணம் என்று சாபம அவருக்கு இருப்பதால் புத்திர பிரி வும் புத்திர சோகம் தானே என்று கருதியே ராமனை வனததிற்கு அனுப்பி உனககு அரசாட்சியை வர மாகப் பெற்றாள் எனறு கூறினா.

அப்படியானால் தன்னை வனத் திற்கு அனுப்புவதற்கு என்ன? என்று பரதன் கேட்கவே, உன்னைப் பிரிந்து சுமார் பன்னிரண்டு ஆண்டு கள் ஆகியும் உன் தந்தை மனம் கலங்கவில்லை. சத்ருக்னனும் அருகில் இருக்கும்போதுதான் உயிரை விட்டு இருக்கிறார். ஆனால் முன்பு விசுவா மித்ரர் ராமனைத் தருவீர் என்று கேட்டபோதே மூர்ச்சையடைந தார். மேலும் ராமன் பிரிந்து இரண்டு நாளில் உயிரை விட்டு விட் டார். எனவே ராமனது நன்மை கருதி உன் தாய் செய்த தியாகம் ஒப்பற்றது என்றார். கைகேயி தான் செய்த செயலின் காரணத்தை இதனால்தான் ராமனிடமோ உன்னி டமோ மற்றும் யாரிடமும் கூறாது வீண் அபவாதத்தை ஏற்றாள் என்று கூறி, இன்னும் இதில் உனக்கு ஐயம் இருந்தால் நீ நம் குருவான வஸிஷ் டரைக் கேள் என்று கூறி முடித் தார் சுமந்திரர். உடனே பரதன் தாயின் பாதங்களில் விழுந்து வணங்கி மன்னிப்புக் கேட்டான். கைகேயியும் மகிழ்ந்தாள். பாஸ கவி இவ்விதம் எழுதுவதால் கைகேயியைக் குற்றமற்றவளாக்கி விடுகிறார். இவ்விதம் ராமாயணம் படிக்கும் அன்பர்களுக்கு இயல்பாக எழும் ஐயங்கள் யாவும் பாஸகவி தன் ராமாயணத்தின் மூலம தீர்த்து வைக்கிறார்.

பிறகு ராமலக்ஷ்மணாகளும் ராவ ணாதியரை வதைத்து வானர சைன் யத்துடன் அயோத்தி கிளம்பினர். பரதனும் ராமன் வருவதறிந்து வஸிஷ்டர் முதலானவர்களுடன் எதிர்கொண்டு வரவேற்று, ஜனஸ் தானத்திலேயே பட்டாபிஷேகத்தை ராமனுககு நடத்தி மன்னனாக முடி சூட்டி அயோத்திக்கு அழைத்து வந்து ராமனது பாதங்களைப் பணிநது போற்றி நின்றான்.

இவ்விதம பாஸகவி தனது ராமா யணத்தை திறம்பட அமைத்து எல்லா பாத்திரங்களையுமே உயர்வு படுத்தி இருக்கிறார். அத்தகைய ஸ்ரீராமன் நம் யாவரையும் என்றும் காத்தருள்வராகுக.

யதாராம! சஜாநக்யா பந்துபிः ச
ஸமாகத:।
ததா லக்ஷ்ம்யா ஸமாயுக்தः ராஜா
பூமிம் ப்ரசாஸது ந: ॥

ஜானகி தேவியுடன் கூடிய ஸ்ரீராமர் மிகக் கீர்த்தியுடன் இந்த பூமியை என்றும் காப்பாற்றட்டும் என்பது பாஸகவியின் வாக்கு. ★

பிற்காலச் சோழர்கள எழுப்பிய சைவ, வைணவ ஆலயங்கள் சிறப்புச் செறிவுடன விளங்குவன. கருங்கல்லும், செங்கல்லும் இணைந்த கட்டிடககலை இவர்கள் காலததில் உருப்பெற்று பிரசார மடைந்தது. கோவில்களில பரத நாட்டிய முத்திரைகளைச் சிற்ப வடிவில் வடித்தனர். சிற்பம், ஓவியம் இவற்றிற்குக் கருவூலங்களாகக் கோயில்கள் திகழ்ந்தன. நுண் கலைகள் கோவிலை முக்கிய கேந்திரமாகக் செதுக்கப்பட்டுள்ளன. மிகவும் பிற்காலத்தில் நாயக்கரது ஆட்சியில் திருக்குடந்தையில் எழுப்பிய சிற்பக் கருவூலமாய்த் திகழும் இராமன் கோயிலில் மகா மண்டபத்து கருங்கல் கூரையை ஒட்டி சிற்ப வடிவில இராமாயணக் காட்சிகள் செதுக்கப் பட்டிருப்பதுடன் உள் திருச்சுற்றின் சுவரில் வண்ண ஓவியத்தில் 269 காட்சிகளாக இராமாயண நிகழ்ச்சிகள் தீட்டப்பட்டுள்ளன. கால வெள்ளத்திலும், கால இருக்கும்படி மிகச் சாதுர்யமாக அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள். தொடங்குமிடத்தில் புடைப்புச் சிற்பமாக விபீஷணர் ஸ்ரீரங்கநாதனை இராமனிடம் பெற்று, இலங்கைக்குத் தலையிலே தாங்கி எடுத்துச் செல்லும் சிற்பம் உள்ளது. பிறகு தேவர்கள் முறையிட்டிலிருந்து இராமாயணம் தொடங்குகிறது. இந்தச் சிற்பங்கள் நுட்பத்திலோ வண்ணக் கலவையிலோ மிகச் சிறந்ததாகக கூற முடியாவிடினும், கதைப் போக்கிற்குத்

# ★ சித்திர இராமாயணம்-திருக்குடந்தை ★

கொண்டு வளரலாயின. சிவன் கோயிலாயினும் சரி, பெருமாள் கோயிலாயினும் சரி புடைப்புச் சிற்பங்களில கர்ணிகைகளையும, மேற்பகுதி கருங்கல தளத்தை ஒட்டி அடிச்சுற்றில் மகா மண்டபத்தில் சுற்றிலும் புடைப்புச் சிறபமாக இராமாயணக காட்சிகளையும அநேகமாக எலலா கோயில்களிலும்வடிததிருக்கிறார்கள். இதிலிருந்து இராம கதை எவ்வளவு தூரம் மக்களுடைய மனதில் இடம் பெற்றிருநதது என்பதை ஒருவாறு அறியலாம். தாராச்சுரம் திருக்கோயில், திருககுடந்தை கும்பேசா திருக்கோயில், திருநாகேச்சுரம் திருக்கோயில் போன்ற கோயில்களில் இவை நன்கு நிலை வேறுபாடுகளினாலும் சுண்ணம்புச் சுதை உதிர ஆரம்பித்தது. ஓவியங்கள் மங்கி அழிந்தன. பின்னர் சுமார் 150 ஆண்டுகட்கு முன்பு மீணடும் இராமாயண வண்ணச் சித்திரங்களை எழுத முயறசி எடுக்கப் பட்டு ஒருவாறு எழுதி முடித்தார்கள். 3 அடுக்குகளில் வண்ண ஓவியம் தீட்டப் பெற்றுள்ளது. மேல் வரிசை, நடுவரிசை, அடி வரிசை ஆக மூன்று வரிசைகள் உள்ளன. மூன்று முறை வரிசையாகச சுற்றிவர இராமாயணம் பட்டாபிஷேகத்துடன் முடிவு பெறுகின்றது. இத்தொடரில் உள்ள சித்திரங்களை கதைத் தொடர்பும், கருத்துச் செறிவும் இணைந்து தகுந்தவாறு ஓவியங்களை அமைத்துக் கொடுத்திருககிற பாங்கு மிக அழகியது. இராமாயணத்தைப் படித்து ஒருவர் பெறும பேரறிவின் பெரும்

கொட்டையூர் தம்பு
ப. கிருஷ்ண ஸ்வாமி

பகுதியினை இந்த ஓவியங்களைக காண் பதிலேயே நாம் பெற முடிகிறது. சித்திரங்களை அமைத்துக் கொடுத்திருக்கிற பெரியார்களின் நுண்ணறிவையையும், புலமையையும் இச்சித்திரங்கள் வெளிப்படுத்துகின்றன: உதாரணமாக 129-வது சித்திரத்தைக காண்போம். வில்லை யெடுத்துப்



இராமன் ஏழு மரா மரங்களை அம்பு கொண்டு துளைத்தல்.

பூட்டிய அம்பும், இழுத்த நாணு மாக ராகவன் நிற்கின்றான். "பிரத்யா லீடம் என்கிற சிற்ப அமைப்பு. எதிரே ஏழு ஓங்கி வளர்ந்த மரங்கள். சுற்றிலும் புதர்கள். அடிப் புறத்திலே மலைப்பாங்கான பூமி என் பது தெள்ளத் தெளிவாகப் புலப்படு கிறது. சுற்றிலும் புதர்கள். மரங் களினால் ஏற்பட்ட இருளைக்கூட அவ் வோவியத்தில் காண முடிகிறது. கூர்ந்து நோக்கினால் ஒரு பாம்பின் உருவம் தெரியவரும். சிந்நேரத்தில் பாம்பு நன்கு புலப்படுகின்றது. வளைந்த உடம்பு சீறி எழுகின்ற பட மெடுத்த தலை; மொத்தம் ஏழு வளைவுகள். ஒவ்வொரு வளைவு ஓரத் திலும் சிகரம் போன்ற எழுச்சி. சிகரத்தின்மீது நிவந்தெழுந்த ஆச்சா மரங்கள். ஒரு புறத்திலே 4 வளைவு ஓரங்கள். மற்றொரு புறத்திலே 3 வளைவு ஓரங்கள் ஆக ஒரு புறம் 4 சிகரங்களும் மற்றொரு புறம் 3 சிகரங்களுமாக மொத்தம் ஏழு சிகரங்களும் மரத்துடன் காட்சி அளிக்கின்றன. ஒரு புறத்தில் 4 மரங்களும் ஒரு நேர்க்கோடு வரிசை யில் அமைந்துள்ளன. அந்த நேர்க் கோட்டுக்கு எதிரே இணையாக படத் தில் காண்கின்றபடி மூன்று மரங் களும் நேர்க்கோட்டு வரிசையில் அமைந்துள்ளன. ஆக 4 மரத்தில் ஒரு வரிசை 3 மரத்தில் மற்றொரு வரிசை. அதை இராமன் ஓரம்பினால் ஓர் முறை எய்தி ஏழு மரங்களையும் துளைத்த வரலாற்றினை இச்சித்திரம் சுட்டுகின்றது. இரண்டு தனித்தனி வரிசைகளில் உள்ள மரங் களை இரண்டு முறை தனியே அடித்துத் துளைக்கலாம். ஒரே முறையில் அவன் எவ்வாறு துளைத் தான் என்பதையும் இப்படத்தை பிளான் செய்து கொடுத்த பெரியார் அழகாக அமைத்துள்ளார். படத் தில் இராமனுடைய காலடியில் வாசுகிப் பாம்பின் வாலினைக் காண் கின்றோம். அவ்வாலின் நுனிமீது பகவானுடைய திருவடிப் பெரு விர லால் அமுக்குகின்ற பாங்கினையும் காண்கின்றோம்.

இந்த ஓவியம சிக்கலான வாலி வதத்தை காரண காரியங்களுடன் இலைமறை காயாக உள்ள விளக்கத் தையும் கலந்து விளக்கம் பெறும்படி அமைத்திருக்கிறார். மேலெழுப் பார்ப்போர்க்கு கதைப் போக்கு ஓடும். ஊனறி நோக்குவார்க்கு பலப்பல இராமாயண நுட்பங்களும புலப்படும். ஓவியத்தை நோக்கு வோம். வாலி இராமாவதாரத்திற்கு வெகு நாள் முன்பே பிறந்தவன். கூர்மாவதாரக் காலத்திலேயே வாலி புகழ் பெற்று விளங்கினான். தேவர் களும் அசுரர்களும் அமுதம் பெறக் கடல் கடைந்தனர். உலகத்தில் உள்ள எல்லா பொருள்களையும, மரம், செடி, கொடி, மூலிகைகள் அனைத்துமே பாற்கடலில் போடப் பட்டு, பாற்கடல் கடையப்பட்டது. அமுதத்தை வேண்டி ஆர்வமுடன் ஒரு புறத்தில் அசுரர்களும், மறு புறம் தேவர்களும் கயிறை இழுத்துக் கடையத் தயாராக நின்றனர். மந்திர மலையை மத்தாக்கினர். இம் மாபெரும் மலைக்கு சுற்றுக் கயிறாக வாசுகியை இருக்க வேண்டினா வாசுகியும் இநதிரன் ஆணைக்குட் பட்டு, கயிறாக இருக்க இசைந்தான். தலைப்புறம் அசுரர்களும், வால்புறம் தேவர்களும் இழுக்கத் தொடங் கினர். பகவான் கூர்மாவதாரம் எடுத்து மலை அமிழாது தாங்கினான். சாயாமல் ஒரு கையினால் நுனியைப பிடித்துக் கொண்டான். என்ன இழுத்தும் மலை சுழலவில்லை. வாலி எங்கே? வாலி எங்கே? என்று எல் லோரும் ஒலி எழுப்புகின்றனர் அரக்கர் பக்கலில் சிந்நேரமும், தேவர்கள் பக்கலில் சிந்நேரமும இப் படி மாற்றி மாற்றி கை கொடுத்து வாசுகிக் கயிற்றை இழுக்கலானான். மலை சுழன்றது. தேவர்கள் அமுதம் பெற்றனர். அசுரர்கள் ஏமாந்த வரலாறும் நாம் அறிந்ததே.

எம்பெருமான் மோகினி அவ தாரத்தை முடித்துக் கொண்டு சாவ காசமாக எழுநதருளினான். வாசுகி மூச்சிரைக்க 'ரிச்யமுக' மலையின்மீது மதங்க முனிவருடைய ஆச்ரமத்துக் கருகில சென்று படுத்தான். மதங்கர் வசிக்கும் மலைக்கருகில் வாலி அண்ட மாட்டான். பெரு மூச்சுவிட்டுக் கொணடிருந்தான். முனகிக் கொண டிருநதான். உடம்பை நெளித்துக் கொண்டிருந்தான். பகவான் வந்த தைக் கூட அவன் அறியவில்லை வலி தாளாது புலம்பிக்கொண்டிருந்தான். பகவான் வாசுகியைப் பார்த்து 'நலல காரியத்துக்கு உதவியுள்ளாய். இந் திரன் உன்னை மறந்தாலும், நான உன்னை மறக்கவில்லை' என்று கூறி னான். 'வரம் ஏதேனும் வேணடு மாயின் பெறுக' என்றும் அனபு ததும்பக் கூறினான். உடனே வாசுகி 'பகவானே தேவகாரியத்துக்கென்று இசைந்தேன். ஆனால் தேவர்கள் லட்சியம் செய்யவில்லை. வாலியைக் கொண்டு இழுக்கச் செய்து பழி வாங்கினர். வாலி முரட்டுத் தன மாக இழுத்துவிட்டான். உடம்பெல் லாம் காயம். மூச்சுத் திணறுகின்றது. கண்கள் பிதுங்கி உள்ளன. வலியோ தாளவில்லை. புலம்புவதற்குக் கூட எனக்கு உடலில் உரமில்லை. இந் நிலைக்கு என்னைச் செய்தான் வாலி. அவனாலேயே நான் இந்நிலைக்கு ஆளானேன்' என்று ஆவேசத் துடன் சொற்களைக் கொட்டினான்.

பகவான் வரத்தை ஞாபகப்படுத் தினான். உடனே வாசுகி, 'இந்த வலி மறக்கும்படி எனக்கு நீண்ட உறக்கம் தேவை. பகவானே நீ இதை அருளுவாயாக'. என்று கேட்க 'நீ யுகயுகமாகத் தூங்குவாயாக' என்று பகவான் வரம் அளித் தான். மேலும் ஒரு வரம் பெற்றுக் கொள் என பகவான் கூறலும், வாசுகி ஆக்ரோஷத்துடனும், ஆவே சத்துடனும் "என்னை இந்நிலைக்காக் கிய வாலி மாண்டொழிந்தான், பாவி இங்கு இல்லை என்ற இன் சொல்லை

நான் துயிலுணரும் பொழுது செவிகளால் நுகரப்பருக வேண்டும்'' என்றும் வேண்டினன்''. இறைவனும் இசைந்தருளி மறைநதனன். வராக, நரசிமமம், வாமன, திருவிக்ரம் அவதாரங்கள நிகழ்நது முடிநதுபோயின. யுகங்கள் கடந்தன. வாசுகி தூங்கினன், தூங்கினன், தூங்கினன். அவனுடைய உடம்பின்மீது செடி, கொடிகள் படரலாயின மண மேடிட்டது, மலை வளர்ந்தது. அவன் படுத்திருநத வளைவுகளில் எழுந்த ஏழு சிகரங்களின்மீது ஏழு ஆச்சா மரஙகள் விண்ணளாவ ஓஙகி வளாநதன வாசுகி பூமிக்கடியில் புற்றுகளுக்கிடையே உறங்கிக கொண்டிருந்தான். முதுகில் இருந்த பாரங்கள் அவனுக்கு உறைக்கவில்லை. இராமாவதாரம் ஏற்பட்டது. சீதையைத் தேடி இராமபிரான் வந்து சேர்ந்தான. கிஷ்கிந்தைக்கு வந்ததும் இராமனுககு வாசுகியின நினைவு ஏற்பட்டது. சுகரீவனுடன் நட்பு கொண்டான். சுக்ரீவன், இராமபிரான் இறைவன அவதாரம எனபதை அறிந்திலன். இருப்பினும் யார் இந்த ஏழு மராமரங்களையும் ஓரமபினல் துளைப்பரோ அவரே வாலிக்கு காலனக முடிவர் எனபதை அறிவான். ஆகையினல் அவன் இராமபிரானது திறனைச் சோதிக்க இதனைச் செய்யுமாறு ஏவினன். இராமபிரானும் நேரம் வநதுவிட்டது எனறறிந்து இசைந்தனன். மரங்களுககு எதிரே பூட்டிய விலலோடு நின்றன் அவனுடைய திறல் மிகுந்த கண்களுக்கு கீழே வாசுகி படுததுறங்குவது புலப்பட்டது. தனது வலது கால் கட்டை விரலினல் வாசுகியின வாலினை ஆழ அமுக்கினன். வாசுகி உறக்கத்திலிருந்து விழிதது, சீறி எழுந்தான். வளைந்த உடல் நேராக நிமிர்ந்து முன்னே உந்தியது. முதுகின் வளைவு ஓரங்களில் வளர்நதிருந்த மரஙகள் ஒரே நேர் கோட்டிற்கு வந்து சேர்ந்தன. அநத சிநநேரத்தில் எய்யப்பட்ட இராமபாணம் ஏழு மரங்களையும் துளைதது மீண்டது. சுக்ரீவன் மகிழ்ந்தான். மறுநாள் வாலி வதம். வாசுகியின் வரம் பலித்தது.

இந்த வரலாற்றையும், வால்மீகி இராமாயணத்தில் நேரே சுட்டப்படாததும், கம்ப இராமாயணத்தில் மறை முகமாக கூறப்பட்டிருப்பதும் பிற புராணஙகளில வெளிப்படையாகக்கூறப்படடுள்ளதுமான இவ்வரலாறுகளையும கலந்து, இச்சித்திரங்களில் தொடர்ச்சி குலையா வண்ணம் ஆக்கிக் கொடுத்திருககிருர்கள். இநத வாலி வத ஓவியத்தில் காணப்படும நுண்ணிய பொருள் விளக்கங்கள் போல் பல சித்திரங்கள திருககுடந்தை ஸ்ரீ ராமஸ்வாமி கோயில ஸ்ரீ ராமாயணத் தொடர் ஓவியங்களில் காணப்படுகின்றன. கவனமாக பொருள் அமைதியோடு காணப்படும் ஒரு பாம்பு மேலெழ நோக்குவார்க்கு மலை, காடு ஓவியச் சிறப்பு என்றும், ஊன்றி நோக்குவார்க்கு வாசுகி வரலாறும், பிற நிகழ்ச்சிகளும் புலப்படுத்தப்படுகின்றது. இதுபோல் ஊன்றி நோக்குவாரக்கு ஊற்றெனப் புதுப்புது விளக்கங்களும், விஷயங்களும் அறிய உளளன என்பதைக கூறி இச்சித்திரங்கள் நம்மனேரால் பலமுறை ஊன்றி, கவனித்து இன்புறுத்தக்கன என்று கூறி இக்கட்டுரையை முடிக்கின்றேன்.

★



ஞான ஆஞ்சநேயர் ஸ்ரீமுஷ்ணம் கோயில்-திரு. கே. சீதாராம்-கோவை.

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

**'ஔபநிஷதமதம்' பற்றிய சிறு விளக்கம் என்ன?**

உடலுக்கு உயிர் முக்கியம். அதுபோல் ஒவ்வொரு பெரிய தேசத்திற்கும், தேசத்தின் மதக் கொள்கைக்கும, உயிராய் விளங்குவது, அந்த அந்த மதத்தின் ஆதிப்புனித நூலாகும். இந்நூலை ஒரு தெய்விக அரசியல் சட்டம் எனலாம். மனிதன எவ்வகையிலும் அறிந்து கொள்ள முடியாத ஆனல் கட்டாயம் அறிந்து கொள்ள வேண்டிய நிலைத்த, நீடித்த, நற்கருத்துக்களைக் கூறியும், தவிர்க்க வேண்டிய செயலை அழுத்தி உரைத்தும் நல்வழி புகட்டும், இந்து மதத்தின் ஆதிப்புனித நூலே வேதமாகும். இதனைக் கடவுளின் மூச்சுக்காற்று என்பதை 'யஸய நிச்வஸிதம் வேதா:' என்ற பிரமாண வாக்குக் காட்டும். வேதத்தைக் கடவுளின் திருவாக்கு என்பதும் உண்டு. இந்த வேத நெறிக்குக் கடவுளும் உட்பட்டவர் என்பதை 'வேத வேத்யன், அஹம் வேத பராதீன:' என்ற சான்ருேர் அருள்மொழி விளக்கும். கண்ணனே கீதையில் 'ச்ருதி: ஸ்ம்ருதி: ம மைவாக் ஞா' என அருளினுர். இந்த வேத நெறியை மீறினாலும் அலக்ஷியப்படுத்தினாலும் அதனால் ஏற்படும் தீங்கு நமக்குத்தான். அத்துடன் கண்ணனும் வேத நெறியைப் புறக்கணித்தவர்களைக் 'கொடிய நரகத்தில் தள்ளுவேன். இருள் பாதையில் செலுத்துவேன். அவன் அடுத்த பிறவியில் ஒன்றுக்கும் உதவாக்கரை மனிதனாகவும் விலங்குகளாகவும் பிறப்பன்' எனக் கண்டிப்புடன் அருளியும் இருக்கிருர். வேதத்தைத் தமிழ் மொழியில் 'மறை' என்பர். அரிய உண்மையான ரகசியக் கருத்துக்களை இந்நூல் மறைத்து வைத்திருப்பதால் இதற்கு மறை எனப் பெயர் ஏற்பட்டது. 'மறையே இறை' என்ற பழமொழியும் உண்டு. பைபிள், குரான், கிரநத்ஸாஹிப், ஜந்தவஸ்தா தம்மபதம் என்ற தெய்வ நூல்கள் போல், வேதம் இந்துக்களின மிகப் புனித நூலாகும். இந்த வேதத்தை மந்த்ரம், ப்ராம்மணம, உபநிஷதம் எனவும், மந்திரப் பகுதியை ஸம்ஹிதை-பதம்-க்ரமம், ஜடை, கனம், லக்ஷணம் எனவும் பிரித்தார்கள். முதல் மூன்று பிரிவில் கடைசியாக உள்ளது அதாவது வேதத்தின் அந்தத்தில் உள்ளது வேதாந்தமாகும். இதனை வேதாந்தம, உபநிஷதம் ப்ரம்ம காண்டம், சாரீரகம் உத்தரமீமாம்ஸை, அத்யாத்ம சாஸ்திரம் என்றெல்லாம் கூறுவார்கள். இந்த உபநிஷதத்தில் ஆன்ம தத்துவம், பரப்ரம்மதத்துவம், நமக்கும் பரமனுக்குமுள்ள தொடர்பு, அதை அடையவழி, அடைந்த பின் கிடைக்கும் பயன், சிற்றின்பங்களின் அற்பநிலை என்பன போன்ற உயரிய, உருப்படியான கருத்துக்களை நன்கு விளக்கும். அதனுல் இநத உபநிஷதத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்த மதங்கள் ஔபநிஷத மதங்களாகும. இந்த உபநிஷதங்களில் நம் சிற்றிவுககு விளங்காமலும், முரண்பட்டவைகள் எனத் தோற்றமும் கொணட அருமையான முததுக்கள் போன்ற செம்மைக் கருத்துக்களை நூலில் கோத்து மாலையாக ஆக்குவது போல் மகானுபவரான வியாச பகவான பொஙகும் கருணையினுல் பிற்பட்டோர் களின நலம் கருதிப் 4 அத்தியாயங்கள் 16 பாதங்கள 156 அதிகரணங்கள் 545 சூத்திரங்கள் கொணட ப்ரம்மசூத்திரம் என்ற நூலை வெளியிட்டார். சூத்திரம் என்ருல் கோர்க்கும் நூல் எனவும் பெயர். இதுவும், மற்றும் போர்க்களத்தில் தேர்த்தட்டில் தேரின் சாரதியாக இருநது கண்ணன் அருச்சனனுக்கு உபதேசித்த 18 அத்யாயங்களும் 700 அல்லது அதறகுக் கொஞ்சம் அதிகமான செய்யுள்கள கொணட கீதையும ஔபநிஷத மதத்தின் அடிப்படை நூல்களாகும். கீதையும் ஒரு உபநிஷத்துக்கு ஒப்பு என்பதைப் பாரதம் 'அத்ர உபநிஷதம் புண்யாம் கிருஷ்ணத்வைபாயனே ப்ரவித' என உரைத்தது. ஆக உபநிஷதங்கள் - கீதை - ப்ரம்ம சூத்திரம் என்ற இநத ப்ரஸ்தானத்ரய நூல்கள் இந்து மதத்தின ஆணிவேராகும்; அருமருந்தன்ன நூல்களாகும். ஔபநிஷத மதத்திற்கு அடிப படைப் பிரமாண நூல்கள இவையே.

(தொடரும)



மகாதேவ மலைக் கோயில்—சன்மிஷ்டை.

தொடர் நூல்:

# ★ திருவேங்கடமலை வரலாற்று மாலை ★

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

திரு தி அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான்.
திருப்பதி.

மேலும் அவ்விராமாநுசமுனிவர்— ''பாஷண்டர்கள் (வேதநெறியின்படி நடவாதவர்கள்) என்னும் மரங்களின் தொகுதிக்குக் காட்டுத்தீப் போன்றவரும் சாருவாகர் (உலகாயதமதத்தினர்) என்னும் மலைகளுக்கு வஜ்ராயுதம் போன்றவரும் பௌத்தரென்னும் இருளைப் போக்குவதில் சூரியன் போன்றவரும் சைனர்களென்னும் யானைகளுக்குச் சிங்கம் போன்றவரும் மாயாவாதிகள் (சங்கர மதத்தவர்) என்னும் பாம்புகளைப் பங்கப்படுத்துவதில் கருடன் போன்றவரும் ரிக் வேதம யஜுர் வேதம் ஸாம வேதம் என்னும் மூன்று வேதங்களை அறிந்தவர்களுக்குச் சிரோபூஷணம (தலையிலணியும ஆபரணம) போன்றவரும் ஸ்ரீரங்கநாதனுடைய வெற்றிக் கொடி போன்றவருமான இந்த இராமாநுசமுனிவர் எல்லாப் பெருமையுடனும் விளங்குகிறார். பாஷண்டர் திரளகளாகிய மலைகளைப் பிளப்பதில் வஜ்ராயுதம் போன்றவையும் வைதிகவேஷத்தால தமது பௌத்த மதத்தை மறைத்துக் கொண்டவர்களாகிய (சங்கராத்வைதிகளாகிய) கடலைக் கலக்கும் மத்துத்தடிகள் போன்றவையும் வேதத்தின் ஸாரப் பொருள்களை வருத்தமறக் காட்டுவதில் விளக்குத் தண்டுகள் போன்றவையுமாக இராமாநுசருடைய திரிதண்டங்கள் (முக்கோல்கள்) திகழுகின்றன. நல்லொழுக்கங்களை (உபதேசத்தின் மூலம்) உயர நிறுத்துதற்கு (ஆசிரியர்கள் உபயோகப்படுத்தும்) பிரம்புத்தடி போன்றதும ஆற்றலபெற்ற சாத்திரச்சட்டமாகிய வழிகளை அழகுபடுத்தும கொடிக்கம்பம் போன்றதும ஸதவித்யை எனப்படும் ஒருவகைப் பக்திமார்க்கத்திற்கு விளக்குத்தடி போன்றதும் கலியுகத்திலுண்டான ஸகலவிதமான பொருளற்ற வாதங்களை அழிப்பதில யமதண்டம் போன்றதும் (எதிர்வாதங்களால் தளர்ந்த) வேதாந்தங் (உபநிஷதங்)களுக்குக் கைப்பிடியான தடி போன்றதும மூவுலகங்களையும் வென்று தனது நிழற் கீழே வைத்துக் காப்பாற்றும (தமது) குடைக்குத் தங்கக் காம்பு போன்றதும் பிரதிவாதம் செய்யுமவர்களின் சிரங்களுக்கு வஜ்ரதண்டம் போன்றதுமான திரிதண்டத்தை ராமாநுஜாசார்யர் தரிக்கின்றார். வேதமென்கிற மாதுக்கு மங்கலநாணாகவும் பன்னிரண்டு வழிகளில் (வைகுண்டத்திற்குச் செல்லும் வழிகளாக அமைந்த அர்ச்சிஸ் முதலான உலகங்கள் பன்னிரண்டில்) ஏறிச் செல்வதற்கு உரிய கைப்பிடி கயிறாகவும் ஸதவித்யையென்கிற பக்திசெய்யும் முறையாகிய யந்திரத்தை இயங்குவிக்கும் ஸூத்ரமாகவும் (நாடாவாகவும்) பரப்பிரம்மத்தைப் பற்பல பண்புகளோடு கூடியதாகக் கூறும் வியாஸஸூத்திரங்களை அறிந்தவர்களின் (அறிவுச்) செல்வங்களுக்கு அறிகுறியான முத்துஹாரவடமாகவும் புலவர்களுக்கு அறிவையூட்டும் வேதாந்தஸூத்ரமாகவும் சாந்தியையே (புலனடக்கத்தையே) செல்வமாகக் கொண்டுள்ள யோகிகளின் உள்ளமென்கிற தாமரைப்போடைக்கு (அழகூட்டும) தாமரைத் தண்டாகவும் முனிவர்களைக் காப்பாற்றும் (காப்பு)நாணாகவும் — யதிராஜரின் திருமார்பில் யஜ்ஞோபவீதம் (= பூணூல்) மிகப் பெருமையுடன் விளங்குகிறது. பாஷண்டர்களாகிய கடலை வற்றுவிக்கும்—படைபையென்னும் பெண் குதிரையின் முகத்திலுள்ள நெருப்பாகவும் ஸ்ரீரங்கராஜருடைய திருவடித்தாமரைகளின் கீழ்ப்புகும் அடியவராகவும் ஸ்ரீவிஷ்ணுலோகத்திலுள்ள திருமாமணிமண்டபத்துக்குச் செல்லும் வழியைத் தருமவராகவும், துறவியரசர்கட்கெல்லாம் அரசரான இராமானுசர் எல்லோரினும் மேம்பட்டு விளங்குகிறார்'' என்று இவ்வாறாக நாற்புறத்திலும் பரமபாகவதர்களால் விருதுகள் முழங்கப்பெற்று வைதிகர்க்குப் பேரரசராய்ப் பிரகாசித்தார்.

### திருவேங்கடமலையடிவாரத்தில் ஆழ்வார்களின் பிரதிஷ்டை

இவ்விதமாக வைஷ்ணவப் பெரியோர்களால் முழங்கப்பெற்ற வாழ்த்துக்களையும் விருதுகளையும் பெற்ற வைதிகர்க்குச் சக்ரவர்த்தியாகிய பகவத் ராமாநுஜ முனிவர்—

சுகாதிமுனிவர்களும் ப்ருகு முதலிய தவச்செல்வர்களும் ப்ரஹ்லாதன் தொடக்கமான புண்ணியவான்களும் அம்பரீஷன் முதலான அரசர்களும் திருவேங்கடமென்னும அவ்வுயர்ந்த மலையைத் திருமாலின் மற்றொரு திருமேனியாகவே கருதித் தம் காலால் மிதித்தேற அஞ்சி அதன் பக்கங்களிலேயே வசித்துக்கொண்டும் அதிலிருந்து உண்டான அருவியாறுகளிலேயே ஸ்நாந தர்ப்பணாதிகளைச் செய்துகொண்டும், ஜநார்த்தனனைக் கண்ணால் காணவிரும்பித் தவமியற்றுகின்றனர்—என்று வாமன புராணப்பகுதி 21 எண்ணிட்ட இரண்டாமத்தியாயத்திலுள்ள வசனங்களினால்—பரம்பொருள் இன்னதென்றும் அவரப்பொருள் (தாழ்ந்த பொருள்) இன்னதென்றும் பகுத்தறியுமவர்களில் தலைவர்களான சுகாதி பரமயோகிகளும் ப்ரஹ்லாதாதி பரம பாகவதர்களும் அம்பரீஷாதி மகாபாகவத ராஜரிஷிகளும் திருவேங்கட மலையின் கண்ணும் அதில் விளங்கும் திருவேங்கடத்தான்கண்ணும் ஒருபடிப்பட்ட மதிப்புக்கொண்டவர்களாய்த் தம்முடைய ஊனவுடலாலும் காலாலும் அம்மலையைத் தொடுவதற்குப் பொறாமல் அதன் அருகிலேயே தவம்புரிந்து கொண்டிருந்தார்களென்று கூறப்பட்டுள்ளதனாலும், பகவானுடைய இயற்கையான இன்னருளென்னும் கடல் நிரம்பி வழிந்ததனால் திவ்யமான ஜ்ஞானம் பெற்று அறியாமை அறவே ஒழியப் பெற்ற ஆழ்வார்களுக்குள் நம்மாழ்வாரால் திருவாய்மொழியாம் தமிழ்மறைப்பாசுரத் தொகுதியில் மூன்றாம்பத்து மூன்றாம் பதிகம் ஏழாம் பாசுரத்தில்—திருவேங்கடமென்னும் பெரிய திருமலை நமக்கு பகவானோடு ஒத்த தன்மையாகிய வீடுபேற்றினை அளிக்கவல்லது என்றும், எட்டாம் பாசுரத்தில்—திருவேங்கடமாமலையை மட்டும் தொழுதாலே நம் வினைகள் ஓயும் என்றும், ஒன்பதாம்பத்து மூன்றாம் பதிகம் எட்டாம் பாசுரத்தில்—உய்விக்கும் திருமால் நிலைபெற்ற திருவேங்கடமலை உயர்ந்த பூவுலகின்கண் உள்ளது, தேவர்கள் அதனைக் கிட்டிக் கைதொழுகிறார்கள் என்றும் அருளப்பட்டிருத்தலாலும், திருமழிசையாழ்வாரால் நான்முகன் திருவந்தாதியென்னும் தமது தமிழ் வேதத்தில் நாற்பத்திரண்டாம் பாசுரத்தில்—மிகவும ஓங்கிய வேங்கடமலையைச் சென்று வணங்குமின், அது தன்னியல்பினால் நம பாவங்களை நிச்சயமாக நீக்கவல்லது என்றும், நாற்பத்தைந்தாம் பாசுரத்தில்—குளிர்ந்த அருவிகளையுடைய திருவேங்கடமலையே வைகுந்தவாசிகளுக்கும் பூலோகவாசிகளுக்கும் அடையத்தக்க மிக மிக உயர்ந்த இடமாகும் என்றும், நாற்பத்தெட்டாம் பாசுரத்தில்—வேங்கடமலையொன்றே பரமபதவாஸிகள் அடையத்தக்க இடம், அதுவே—அனுபவித்தே தீர்க்க வேண்டிய பாவங்களையும் நோய்களையும் தீர்க்கவல்லது என்றும் அருளப்பட்டுள்ளதனாலும், திருமங்கையாழ்வாரால் பெரிய திருமொழி யெனப்படும் தமது திராவிட வேதத்தில் முதற்பத்து எட்டாம்பதிகம ஒன்பது பாசுரங்களில—நெஞ்சமே நீ திருவேங்கடமலையை அடையக்கடவாய என்று அருளிச்செய்யப்பட்டிருப்பதனாலும், இவ்வாறே பலவிடங்களில் மற்றையாழ்வார்கள் அனைவராலும் திருவேங்கடமலையே அடையத்தகுந்ததென்று பணிக்கப்பட்டிருத்தலானும், அவ்வாழ்வார்களும் திருமலையையும் அங்கு உறையும் திருமாலையும் ஒருபடிப்பட ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் (அடையத்தக்க பயனாகவும அதனை அடைவிக்கும் வழியாகவும்) எண்ணித் தமது தேகத்தாலும் பாதத்தாலும் திருமலை தீண்டற்கு உரியதன்றென்று நினைத்தே அதன் மீது ஏறாமல் (அடிவாரத்திலிருந்தே) மங்களாசாஸனம் செய்தருளினரென்று தெரியவருதலானும், திருமலையின்மேல் நம்மாழ்வார் முதலிய ஆழ்வார்களைப் பிரதிஷ்டை செய்வித்தால் அது அவர்களின் திருவுள்ளக்கருத்துக்கு ஒவ்வாததென்று அறுதியிட்டு அம்மலையின் அடிவாரத்திலேயே திருப்பதியில், திருமலையைப் பார்த்தவாறே தனித்தனியாகக் கோவில்களில், மங்களாசாஸனமொன்றையே பயனாக எண்ணிய அந்த ஆழ்வார்களையும் சாஸ்திரமுறைப்படி அர்ச்சாமூர்த்திகளாக (பிம்பவடிவமாக) பிரதிஷ்டை செய்வித்தருளினார்.

**திருப்பதியில்**
**ஸ்ரீ கோவிந்தராஜனின் பிரதிஷ்டை**

இவ்வாறே, அதற்குச் சிலநாட்களுக்கு முன்பு, பல பிறவிகள் பிறந்தீட்டிய தீவினைத்தொடர்ச்சியின் வசமாகத் தனது சைவ மதத்தில் கொண்ட பெரும்பற்றென்கிற கொடுங்கோன்மையினால் தனது நாடான சோழதேசத்தில் பல இடங்களிலுள்ள விஷ்ணுகோவில்களுக்கு விநாசம் விளைத்து அப்பாவத்தின் விளைவாகக் கழுத்தில் பெரிய பிளவை உண்டாகிப் புழுத்து அதன் கடுமையினால் மரணமடைந்து அதனாலேயே க்ரிமிகண்டன் (புழுத்த கழுத்தினன்) என்று பிரசித்தியடைந்து தனது இயற்பெயர்கொண்டு சொல்லத்தகாத சோழவரசன் ஒருவனால், விஷ்ணு ஸ்தலங்களுக்கு அவனிழைத்த தீங்கென்ற மகாப் பிரளயம் நடந்த சந்தர்ப்பத்தில், காவேரிக் கரையிலுள்ளதும் கண்ணுவ முனிவரின் தவவொழுக்கத்தின் பயனாகக் கண்ணெதிரில் தோன்றிய ஸ்ரீகோவிந்தராஜப்பெருமாள் எழுந்தருளியுள்ளதுமான திருச்சித்திரகூடமென்று பெயர்பெற்ற திவ்யதேசத்துக்கும் பேராபத்து நிகழ, அங்கிருந்து அஞ்சியோடிய சில ஸ்ரீவைஷ்ணவர்கள் தேவாதிதேவனென்று பெயர்படைத்த—கோவிந்தராஜனுடைய உத்ஸவமூர்த்தியை மட்டும் காப்பாற்றிக்கொணர்ந்து திருவேங்கடமலைத் தாழ்வரையில் உள்ள திருப்பதியில் பூஜித்துவருகிறார்களென்றும், அவருடைய மூலமூர்த்தி

யாய்ப் பாற்கடலில் பள்ளிகொண்ட திருக்கோலம் கொண்ட — சித்திரகூடநாதனை — ஸ்ரீ கோவிந்தராஜனென்ற பெருமாள் கடலின்கண் எறியப்பட்டாரென்றும் கேள்விப்பட்ட பகவத்ராமாநுஜமுனிவர், புராணப் பிரசித்தியோடு ஸ்ரீகுலசேகராழ்வார் திருமங்கையாழ்வார்களின் மங்களாசாஸனமும் பெற்ற திருச்சித்திரகூடமென்ற திவ்யதேசம் இப்படி அடியோடு பாழாய்ப்போவது நியாயமுடையதன்றே ஐயோ என்று திருவுள்ளம் கலங்கி, கண்ணுவமகரிஷியின தவமும ஆழ்வார்களின் மங்களாசாஸனமும ஒரு திவ்யதேசத்தின நிர்மூலநாசத்தைப் பொறுக்கமாட்டாவாகையால், அதே திவ்யதேசத்தின்கண் மறுபடியும் பகவானது தோற்றம் உண்டாகியே தீரும், இப்போது சித்திரகூடநாதனாகிய கோவிந்தராஜப் பெருமானை இங்கேயே பிரதிஷ்டை செய்விப்போமென்று கூறி, தமக்கு மிகப்பிரிய தொண்டனை யாதவமன்னவனை அழைத்துத் தமது கருத்தை அனைத்தையும் அறிவித்து, கடலில் எறியப்பட்டவரும் பாற்கடலில் பள்ளிகொண்ட திருவுருக்கொண்டவரும் ஸ்ரீகோவிந்தராஜனென்னும் பெயர் பெற்றவரும் தேவாதிதேவனெனப்படும் உத்ஸவருக்கு மூலமூர்த்தியானவரும் திருச்சித்திரகூடநாதருமாகிய பெருமானை ரகஸ்யமாக ஆவாஹனம் செய்து வந்து, ஸ்ரீகோவிந்தராஜ—தேவாதிதேவர்கள் இருவரையும் திருவேங்கடமுடையானோடு ஒப்ப ஸ்ரீவைகாநஸாகமம் கூறிய விதிப்படியே திருப்பதியில் தென்புறத்திலுள்ள பெரிய ஏரியின் பக்கத்தில் பிரதிஷ்டை செய்வித்தருளினார்.

அந்த கோவிந்தராஜப்பெருமான் — திருப்பாற்கடல்நாதனைத் திருமகளும் மண்மகளும் வருடாநின்ற திருவடித் தாமரையிணையனைத் திருநாபிக்கமலத்தில் தோன்றிய நான்முகனையுடையனாய் மதுகைடபர் என்னும் அசுரரிருவர் நிற்கும் திருவடியருகையுடையனாய் அவ்வசுரரைத் துரத்துவதற்காக விஷாக்நிஜ்வாலைத் திரட்சியை உமிழ்ந்துகொண்டும் பெருமூச்சுவிட்டுக்கொண்டுமிருக்கிற — ஆவென்று அங்காந்த (திறந்த) வாயோடு கூடி உயரவெடுத்த பணாமண்டலங்களை (படத்தொகுதிகளை)க்கொண்ட பாம்பாம் ஆதிசேஷனென்ற அணையில் சாய்ந்தவனாய் அகன்றுநீண்ட கிரீடம் தொடக்கமான திவ்யாபரணங்கள் அணிவிக்கப்பட்டவனாய் நான்கு தோளனாய்ச் சங்கு சக்கரம் முதலான திவ்யாயுதங்களை யேந்தியவனாய்த் தென்பகுதியில் வைத்தருளிய திருமுடியும் வடபகுதியில் நீட்டிய திருவடித்தாமரையிணையுமாக விளங்குமாறு பிரதிஷ்டை செய்விக்கப்பட்டான்.

இப்படி ஸ்ரீராமாநுஜமுநிவரால் உததரவிடப்பெற்ற — நாராயணபுரவாஸியான — அந்நாட்டரசன் யாதவமன்னன் தன் குருவின் ஆணையின்படித் திருப்பதியில் தென்புறத்தில் பெரிய ஏரியினருகில் பெரியதோர் கோவிலில் முற்கூறிய திருவுருவவமைப்புடன் கூடிய கோவிந்தராஜப்பெருமாளைப் பிரதிஷ்டை செய்வித்து, அக்கோவிலுக்கு நான்கு பக்கங்களிலும் தன் குருவின் பெயரால் ராமாநுஜபுரமென்று பிரசித்தமான—அவாந்தர (இடையிலுள்ள) நகரத்தையும் உண்டாக்கி, ஏற்கெனவே—ஸ்ரீ ஸ்ரீநிவாஸனுடைய போகத்துக்குரிய படுக்கையாகவும் விளையாட்டுமலையாகவுமுள்ள ஆதிசேஷனுக்குப் பக்கத்தில் அமையப்பெற்று அவனது கோபத்தினால் மிகவும் தாபமடைவிக்கப்பெற்ற திருப்பதியில், மதுகைடபர்களை விரட்டுவதற்காக விஷாக்நி ஜ்வாலைகளை உமிழுகின்ற — ஸ்ரீகோவிந்தராஜனுடைய திருப்படுக்கையான திருவனந்தாழ்வானுடைய சீற்றத்தினால் மேலும் பெருங்கேடு விளையக்கூடுமென்று அஞ்சி, அவ்விராமாநுஜ முனிவரின் ஆணையைக்கொண்டு, அத்திருப்பதியின் சில அமைப்புக்களைக் மாற்றியும், திருவேங்கடமலையடிவாரத்தில் ஆழ்வார்களுக்கு ஏற்பட்டிருந்த அவ்வக்கோவில்களை — முன்பிருந்த அமைப்பின்படியே இவ்விடைநகரான ராமாநுஜபுரத்தின் நடுவில் கட்டுவித்தும், அத்திருப்பதி நகரத்தை — ஆதிசேஷனுடைய கோபத்தைத் தணிவிக்கும் கருடபக்ஷியின் (தலையும் இறகுகளும் காலும் வாலுமாய்ப் பிரிந்த) உறுப்புக்களின் அமைப்புப் பெற்றதாக, திருமலைக்குச் சிறிது தூரத்தில் நிருமாணம் செய்வித்தான்.

இவ்விதமாகத் தாம் சொல்லியபடியே செய்யுமவனும் தம் மனத்துக்கு இனிய சிஷ்யனும் திருவேங்கட நாட்டரசனும்நாராயணபுரவாஸியுமான யாதவராஜன் தமக்கு அனுகூலமாக இருப்பதனாலும், தமது வேண்டுகோளின்படியே சைவஜனங்களைத் துரத்துவதற்காகத் திருவாழி திருச்சஙகு முதலிய—தனக்கே உரிய ஆயுதங்களையேந்திய திருவேங்கடமுடையான், தம்மால் பிரதிஷ்டை செய்விக்கப்பட்ட ஸ்ரீகோவிந்தராஜப்பெருமான் ஆகிய இருவரிடத்திலுமுள்ள உயர்ந்த அபிமானத்தினாலும், பகவத் ராமாநுஜமுனிவர், தமக்கு ஸ்ரீரங்கநகரத்தில் வாஸம் செய்வதில் அதிகமான ஆசையிருந்தபோதிலும், ஸ்ரீரங்கத்திற்குச் சென்று கொணடும் திருப்பதிககு வந்து கொண்டும் செய்தருளிய மூன்று நான்கு திருவேங்கடயாததிரைகளில், திருவேங்கடத்தைச் சேர்ந்த திவ்யதேசத்தில் அவ்வப்போது அவ்வக் கால தேசங்களுக்கும் பழைய ஐதிஹ்யங்களுக்கும் ஏற்றவாறு பல அதிசய காரியங்களை ஏற்படுத்தியருளினார்.

அந்த யாதவராஜனும் பகவத் பாஷ்யகார (ராமாநுஜ)சிஷ்யனாய்த் தன்னாசாரியரின கட்டளையைப் பின்செல்லுவதொன்றையே தனது பயனாகக் கொண்டவனாய், அவரால் பிரதிஷ்டை செய்விக்கப்பட்ட ஸ்ரீகோவிந்தராஜனிடத்திலும் அவரது பெயரால் குறிக்கப்பட்ட கோவிந்தராஜன் எழுந்தருளியுள்ள ராமாநுஜபுரத்திலும் தான்வைத்த விசேஷாபிமானத்திற்கு வசப்பட்டு, மண்டபம் கோபுரம் மதிள் முதலிய கோவிலுக்கு அங்கமானவற்றையும் நகரத்திற்கு அங்கமான திருவீதி தொடக்கமானவற்றையும் உண்டாக்கி, பெருமாளுக்கு நடத்தும் உத்ஸவவிசேஷங்களையும் நடப்பித்துக்கொண்டிருந்தான்.

(தொடரும்)

# ப்ரதான ஆசார்யன்

திரு. எஸ். கோவிந்தராஜன்–சிதமபரம்.

குருப்யஸதத் குருபயஸ்ச்ச
நமோவாக மதிமஹே ।
வருணிமஹே ச தம்பதி ஜகதாமபதி ॥

''நம்முடைய குருவுக்கும், அவருடைய குருக்களுக்கும நம. என்ற சொல்லே ஓதுகிறோம. அவர்களிலும் முதல் குருககளான உலகங்களுககு சேஷிகளான, பிராட்டியையும் எமபெருமானையும, நாம் அடைய வேணடிய பலனுகவும் உபாயமாகவும வரிக்கிறோம'' என்று வைணவ ஆசார்ய சரேஷ்டரான வேதாநத குரு ஸாதித்தருள்கிறார்.

வைணவ மரபில் எம்பெருமானே விட ஆசார்யனுககுத்தான ஏற்றம அதிகம். அதனுல்தான ஸர்வேச்வரனுன ச்ரிய:பதியை தனககோா ஆசார்யன இல்லாத பரமாசார்யனை ப்ரதம ஆசார்யனுக வைணவ குரு பரம்பரையில ஏற்றம வைதது போறறுகிறார்கள. எம்பெருமான பிராட்டிக்கு நேராக உபதேசிக்கிறார். பிராட்டி, விஷ்வக்ஸேநருக்கு உபதேசிககிறாள். விஷ்வக்ஸேநர் நம்மாழ்வாருக்கு உபதேசிக்கிறார். யோக தசையில நம்மாழ்வாா நாதமுனிகளுககு உபதேசிக்கிறார். நாத முனிகளுக்குப் பின உய்யக்கொண டாரும அவருககுப்பின் மணக்கால் நம்பியும், அவரிடம் உபதேசம் பெற்று ஆளவநதாரும ஆசாாய பரமபரையை அலங்கரிக்கிறார்கள. ஆளவந்தார் தமது முககிய சீடரான பெரிய நமபிகளே, உடையவர், எம பெருமானுர் எனறு புகழப் பெயர் களை உடைய தர்சன ஸ்தாபகரான பகவத் ராமானுஜருக்கு உபதேசிக்கச் செய்து அருளினார். ஸ்ரீ பாஷ்ய காரரான ராமானுஜருககு, திருமலே நம்பி, திருக்கோஷ்டியூர் நம்பி, திருக்கச்சி நம்பி, திருமலையாண் டான், திருவரங்கப்பெருமாள் அரையர் ஆகியோரும் ஆசார்யஸதானம் வகித்து அவருக்கு உபதேசம செய்து அருளியிருக்கிறார்கள். இவர்களுள் பெரிய நமபிகளே எம்பெருமானுருக்கு ப்ரதான ஆசார்யன்.

இப்படி வைணவ ஸம்பரதாயததில் எம்பெருமான் தொடங்கி, பிராட்டி, விஷ்வக்ஸேநர், நமமாழ்வார் நாதமுனிகள், உய்யக்கொண டார், மணககால்நம்பி ஆளவந்தார், பெரியநம்பி, ஸ்ரீபாஷ்யக்காரர் என்று ஆசார்ய பரமபரை வந்து, எம்பெருமானுரின் பல சிஷ்யர்கள் மூலம் பல கிளைகளாகப பிரிகிறது.

ஒருவனுக்கு பல ஆசார்யர்கள் வாய்த்தால் அவர்களுள ப்ரதான ஆசாாயன யார்? இதறகு தூப்பில் தோன்றிய குலமணியாகிய வேதாநத குரு விளககம் தருகிறார்– ''ஒருவனுக்கு பல ஆசார்யர்கள் வாயத்தால், ரஹஸ்யதரய முகத்தாலே உபதேசிப்பவனே ப்ரதான ஆசார்யன'' எனறு. அதாவது திருமநதிரம், த்வயம, சரமஸ்லோகம் ஆகிய மூன்றின ரஹஸ்யார்த்தங்களை விளச்கி, எமபெருமானுடைய ஸ்வருபத்தையும, அவனது அடிமையான ஜீவாத்மாவின ஸ்வரூபத்தையும், பலனுகிய மோக்ஷத்தையும பறறி விரிவாக விளககி, மோக்ஷத்தில் ஆசையை உடைாக்கி அதைப பெறும் சாதனங்களான பகதி, பரபத்திகளுள் சீடனுககேறற தகுதிக்கு ஏற்ற ஓர் உபாயத்தில் உறுதியான தெளிவு ஏற்படும்படி விளக்கமாக உபதேசிப்பதே முக்கிய ஆசார்யனது கடமையாகும. இதைத்தான ''அவ்யவஹித மோஹோபாய வ்யவஸாயம பிறப்பிக்கை ப்ரதான ஆசாாய கருதயம்'' எனறு ஸாதித்தருள்கிறா ஸவாமி தேசிகன. நிலத்தை உழுது, பயிரிட்டு, உரமிட்டு, நீர்விட்டு பலனுன தானயங்களை அடைவதுபோல விளக்கமான உபதேச மூலம் ஜீவனின்உளளத்தைப பணபடுத்தி, தயாராககிப் பலனுகிய மோக்ஷத்தை அடையும்படி செய்வதான விவசாயம் செய்வது ஆசாாயனின முககியமான கடமை.

சிலர் ப்ரபததியாகிற சரணுகதி செய்விப்பவனே ப்ரதான ஆசாாயன எனறு கூறுகிறார்கள. இது சரியலல. நிகமாந்த குருவின் உபதேச வாக்கியமாகிய ''ரஹஸ்யத்ரய மூலமாக உபதேசிப்பவனே ப்ரதான ஆசார்யன்'' என்ற கருத்திற்கு முற்றிலும் முரண்பாடானது.

சரணுகதி மூன்று விதத்தில் அனுஷ்டிககலாம. ''ஸவநிஷ்டை''– தானே எம்பெருமானிடம் சரணுகதி செய்வது. 'பாகவத நிஷ்டை' எம்பெருமானுக்கு உகப்பான பரமபாகவதோத்தமர் அவனுக்காக சரணுகதி செய்வது. 'ஆசார்ய நிஷ்டை'– ஆசார்யன், தன்னுடைய சீடன் உஜ்ஜீவிக்க எம்பெருமானிடம் சரணுகதி செய்வது, இவை மூன்றும ஸ்வாமி தேசிகனுல் விளககிக் கூறப்பட்டுள்ளன. ''ஆசார்ய நிஷ்டை யாக்ய, சீடனுக்காக சரணுகதி செய்வது ப்ரதான ஆசார்ய க்ருதியமானுல, வேதாந்த குரு விளக்கமாகக் கூறியுள்ள 'ஸ்வநிஷ்டை' மூலம் தானே சரணுகதி செய்து கொள்பவனுக்கு அவனே ப்ரதான ஆசாாயனுகவும், ''பாகவத நிஷ்டை'' மூலம் பாகவதோத்தமர் மூலம் சரணுகதி செய்து கொள்பவனுக்கு அந்த பாகவதோத்தமா ப்ரதான ஆசார்யனுகவும் கொள்ளுமபடி நேரிடும. இது சாஸ்திர, ஸமப்ரதாய, ஸித்தாந்த, ஸ்வாமிதேசிகன கருத்துககு நேர் மாறுபாடானதாகும்.

மேலும் ஆசார்ய பரம்பரையை பார்ததால் உபதேச பரம்பரை யாகத்தான் வருகிறது. அதனுல் தான ஸ்வாமிதேசிகன்,

'' ஸாக்ஷாந் முக்தே ருபாயானயோ
வித்யாபேதான் உபாதிசத் ।
கத்யதே மோக்ஷ சாஸதிரேஷு ஸது
ஸரேஷ்டதமோ குரு: ॥

ஆசார்யவததயா மோக்ஷமாமநந்தி
ஸமரந்திச ।
இஹாமுத்ரச தத்பாதௌ சரணம
தேசிகா விது: ॥ ''

'எந்த ஆசார்யன் மோக்ஷத்திற்கு நேரான உபாயஙகளான பக்தி ப்ரபததி எனறு பிரிந்த வித்யைகளை உபதேசித்தானே அவனே மோக்ஷததைப் பற்றிய சாஸ்திரஙகளில மிகவும உயர்ந்த ஆசார்யனுகக கூறப்படுகிறுன. ஆசார்யனை உடைமையாலே மோக்ஷததைப பெறுவதாக உபநிஷத்துக்கள கூறுகினறன. ஸ்மிருதிகளும் கூறுகினறன. இவவுலகிலும் முகதி பெறற நிலேயிலும அநத ஆசாாயனுடைய திருவடிகளையே அடைக்கலமாக ஆசாாயர்கள் அறிநதனா' என்று உபதேசித்து அருளியிருககிறா.

எனவே ஸித்தாந்த ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்களை உபதேசிப்பவனே ப்ரதான ஆசார்யன் என்பதில் சிறிதும் ஐயப்பாடு இருக்க முடியாது.

# கௌஸல்யா ஸுப்ரஜா ராம!

கௌஸல்யா ஸுப்ரஜாராம
பூர்வாஸந்தயா ப்ரவர்த்ததே|
உததிஷ்டநரசார்த்துல கர்த்தவ்யம்
தைவமாஹ்நிகம்||

இந்த ஸ்லோகம் ஸ்ரீவைஷ்ணவ க்ஷேத்ரங்களில் விடியற்காலையில் ஸ்துதிக்கப்படும் ஸுப்ரபாதஸ்தோத்ரங்கள் எல்லாவற்றிலும் முதலாவது ஸ்லோகமாக அமைக்கப்பட்டுள்ளது: இதன் பொருள்— "கௌஸல்யையின் ஸத்புத்ரனான ராம! புருஷோத்தமா! காலை ஸந்த்யா காலம் ஆரம்பிக்கிறது. பகவதாக்ஞையான நித்ய கர்மாநுஷ்டானம் (ஸந்த்யாவந்தனம்) அநுஷ்டிக்கப்படவேண்டும், எழுந்திரு" என்பதாகும்.

இவ்வாறு ஸ்ரீராமனைத் துயிலெழுப்ப வேண்டி ஏற்பட்ட வரலாறு ஸ்ரீவால்மீகி பகவானால் மிகவும் அழகாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. தசரத சக்ரவர்த்தி தன்னுடைய நான்கு குமாரர்களுடைய விவாகத்தைக் குறித்து மந்திரிகளுடன் ஆலோசித்துக் கொண்டிருந்த சமயத்தில் விச்வாமித்ர மஹரிஷி அயோத்திக்கு வந்து தசரதனைச் சந்தித்துத் தான் செய்யப்போகும் யாகத்தை அரக்கர்கள் கெடுக்காமல் ரக்ஷிப்பதற்காக ஸ்ரீராமனைச் சகாயமாக அனுப்பி வைக்கும்படி கோருகிறார். தசரதன் மிகவும் பயமும் துக்கமுமடைந்து விசுவாமித்ரரின் கோரிக்கைக்கு இணங்க முடியாதென்று மறுக்கும் சந்தர்ப்பத்தில் வஸிஷ்டர் தசரதனைத் தேற்றி ஸ்ரீராமனை அனுப்பி வைத்தால் அவனுக்கு மங்களமும் ச்ரேயஸும் ஏற்படும் என்று கூறி தசரதன் ராமனை அனுப்பச் சம்மதிக்கும்படி செய்கிறார். ஸ்ரீராமனையும் லக்ஷ்மணனையும் அழைத்துக்கொண்டு செல்லும் விசுவாமித்ரர், இரவு ஸரயூ நதிக்கரையில் தங்கி அவர்களுக்குப் பசி, தாகம், சோர்வு எதுவும் ஏற்படாமலிருக்கும் பொருட்டும், எந்தக் காரியத்திலும் வெற்றி கிட்டுவதற்காகவும் பலை, அதிபலை என்ற மந்திரங்களை உபதேசிக்கிறார். இரவு ஸ்ரீராமனும் லக்ஷ்மணனும் புல் படுக்கையில் சயனித்து உறங்குகின்றனர். விடியற்காலையில் அவர்களுக்கு முன் விழித்துக்கொள்ளும் விச்வாமித்ரர் ஸ்ரீராமனைத் துயிலுணர்த்தும் வகையில் "கௌஸல்யா.........தைவமாஹ்நிகம்" என்று கூப்பிடுகிறார். பரம ஞானியான விசுவாமித்ரர், மனித உருவில் சயனித்திருக்கும் பகவானின் யோக நித்ரையைத் தரிசித்துப் பரவசமடைந்து கூறும் வார்த்தைகள், ஸ்ரீராமன் பகவான் என்ற நிலையில், விசுவாமித்ரர் அனுஷ்டிக்க வேண்டிய காலைக்கடன்களை

(ஸுகி)

ஏற்றுக்கொள்ளும்படி ஸ்ரீராமனை ப்ரார்த்திப்பதாகவும், ஸ்ரீராமன் மனிதன் என்ற நிலையில் அவன் அனுஷ்டிக்க வேண்டிய நித்ய கர்மாக்களுக்காக, அவனை எழுப்புவதாகவும் இரு பொருள் உள்ளதாக அமைந்துள்ளன. ஆகவே காலையில் பகவானைத் துயிலெழுப்பும் பல திவ்யதேச ஸுப்ரபாத ஸ்லோகங்கள் யாவற்றிலும் இந்த ஸ்லோகம் முதலாவதாக அமைக்கப்பட்டுள்ளது.

"கௌஸல்யா ஸுப்ரஜா ராம" என்று விசுவாமித்ரர் கூப்பிட்டது போலவே, வேறு சில சந்தர்ப்பங்களில் மேலும் மூன்று நபர்கள் ஸ்ரீராமனை அழைத்திருக்கிறார்கள். அந்த வரலாறுகளும் மிகவும் சுவையானவை.

ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்தை நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்த தினம். காலையில் ஸ்ரீராமன் தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டு, ஸீதை ஆலவட்ட கைங்கர்யம் செய்து கொண்டிருக்க, ஒரு அழகான பொன் கட்டிலில் வீற்றிருக்கிறார். கைகேயி சொற்படி ஸ்ரீராமனை அவளுடைய அந்தப்புரத்திற்கு அழைத்து வருவதற்காகச் சுமந்திரர் ஸ்ரீராமனுடைய அந்தப்புரத்திற்கு வருகிறார்.

ஸ்ரீராமபட்டாபிஷேகம் தடைபட்டதை அறியாத சுமந்திரர், ஸ்ரீராமனின் அந்தப்புரத்தில், திவ்யாஸனத்தில் திவ்ய தம்பதிகள் இருவரையும் தரிசிக்கும் போது, அவருடைய மனம் புளகாங்கிதமடைகிறது. அப்போது ஸ்ரீராமனைப் பார்த்து,

கௌஸல்யா ஸுப்ரஜா ராம!
பிதாத்வாம் த்ரஷ்டுமிச்சதி|
மஹிஷ்யாஸஹகைகேய்யாகச்சதாம்
தத்ரமாசிரம்||

"கௌஸல்யையின் ஸத்புத்ரனான ராம! உன்னுடைய தகப்பனார், மஹிஷியான கைகேயியுடன், உன்னைப் பார்க்க விரும்புகிறார். அவ்விடம் விரைவாகச் செல்வீராக" என்று கூறுகிறார்.

ஸ்ரீராமனும் லக்ஷ்மணனும், ஸீதையுடன் தண்டகாவனத்தில் பிரவேசித்ததும், விராதன் என்கிற ராக்ஷஸன் அவர்களை எதிர்க்கும் போது, ஸ்ரீராமனும் லக்ஷ்மணனும் அவனுடைய கைகளைத் துண்டித்து விடுகிறார்கள். குபேரனுடைய வேலையாளாக இருந்த தும்புரு என்னும் கந்தர்வன குபேரனால சபிக்கப்பட்டு விராதனாக மாறி இருந்தான். ஸ்ரீராமனின்கர ஸ்பர்சத்தால் அவன் சாபம் நீங்க, அவன் பூர்வ ஞானத்தை அடைந்து ஸ்ரீராமனைத் துதிக்கிறான். அப்போது, "கௌஸல்யா ஸுப்ரஜா ராம! தாதத்வம் விதிதோ மயா! வைதேஹீமச மஹாபாகா லக்ஷ்மணம் சமஹாயச" | "கௌஸல்யையின் ஸத்புத்ரனான ராம! உன்னையும், பாக்ய

## திருமலையில்

### தி. தி. தேவஸ்தான

# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| எண் | காட்டேஜ விவரம் | கட்டணம (நாள ஒன்றிற்கு) |
|---|---|---|
| | டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| | டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| | ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| | ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| | பெரியன | ரூ. 40/- |
| | சிறியன | ரூ. 20/- |
| | ஹில வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| | சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| | சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| | அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| | கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| | திருமணக் கூடம் (3வது சத்திரம்) | ரூ. 15/- |
| | இறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| | டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |

**எஸ். வி. விருந்தினர் விடுதி,**

| | | |
|---|---|---|
| | பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| | மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| | சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| | எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| | மோடிபவன் | ரூ. 100/- |

**திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள)**

| | | |
|---|---|---|
| | பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| | ரூயா காட்டேஜ் எண: 248 | ரூ. 80/- |
| | கோகினேனி காட்டேஜ் எண்: 226 | ரூ. 80/- |
| | சி. சி. காட்டேஜ் எண்; 237 | ரூ. 100/- |
| | எஸ். எம். சி. கிழக்கு எண : 272 | ரூ. 50/- |
| | ஏ. டி. சி. எண் : 99 | ரூ. 80/- |
| | டி. பி. (உள் பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| | டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| | டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| | ஏ. டி. சி. மற்றும் டி. பி. கி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| | ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

வதியான ஸீதையையும், புகழ்மிக்க லக்ஷ்மணனையும் நான் அறிந்து கொணடேன்'' எனகிறான்.

ஸீதை இருக்குமிடத்தைத் தேடித் தென் திசைக்குச் சென்ற வானரர்கள், வெற்றி கரமாகத் திரும்பி வந்ததும், கிஷ்கிந்தையிலுள்ள மதுவனத்தை அழித்து மிதமிஞ்சிய மது மயககத்துடன் கூடி, மதுவனத்தை ரக்ஷிக்கும் காவலர்களான வானரர்களை அடித்து உபத்ரவம் செய்கிறார்கள். சுக்ரீவனின் அம்மானும் மதுவனத்தின பிரதான காவலாளியுமான ததிமுகன் சுக்ரீவனிடம் சென்று தென் திக்கிலிருந்து திரும்பிய வானரர்கள் மீது புகார் செய்கிறான். ததிமுகன வார்த்தைகளைக் கேட்ட சுக்ரீவன், சீதை காணப்பட்டாள் என்றும், அதுவும் ஆஞ்சநேயனே காரியத்தை வெற்றிகரமாக முடித்துள்ளானென்றும் (அனுமானத்தால்) தீர்மானித்து, இந்த நற்செய்தியை ராமனுக்கு அறிவிக்கிறான். அதன் பிறகு ததிமுகனை அனுப்பி, மதுவனத்திற்குத் திரும்பி வந்துள்ள வானரர்களை உடனே வரும்படி சொல்லி அனுபபுகிறான். ததிமுகன சென்று வானராகளுக்குச் சொல்லி அவர்கள் வநது சேர்வதற்குள் சிறிது தாமதமாகிறது.

ஸ்ரீராமன் அநத தாமதத்தைத் தாளாமல், சோர்வுற்றிருக்கும்போது சுக்ரீவன ஸ்ரீராமனைத் தேற்றரவு செய்து ''கௌஸல்யா ஸுப்ரஜா ராம! ஸமாச்வஸிஹி ஸுவ்ரத! த்ருஷ்டா ஸீதாந ஸந்தேஹு: நஞான்யேன ஹநீமதா'' ''கௌஸல்யையின் ஸத்புத்ரனுன ராம! நல்ல வ்ரதஙகளை உடையவனே! உன்னைத் தேற்றிக் கொள்வாயாக! ஸீதை காணபபட்டாள என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. அதுவும் ஆஞ்சநேயரைத் தவிர வேறு யாராலும் காணப் படவில்லை'' என்று சூக்ஷ்ம புத்தியால் அறிநது கூறுகிறான்.

இவ்வாறு நான்கு சந்தர்பங்களில் நான்கு நபர்கள் ஸ்ரீராமனை ''கௌஸல்யா ஸுப்ரஜா ராம!'' என்று அழைத்த வரலாறுகளை ஸ்ரீ வால்மீகி பகவான் வெகு அழகாகச் சித்தரித்துள்ளார். ★

# ★ கீதை காட்டும் நல்வழி ★

திரு. டி. கே. நாராயணன்,
M.Sc., M.Phil.,
ஆசிரியர் ''சமயஜோதி'' மதுரை.

## புருஷோத்தம யோகம்

### அத்தியாயம்—15.

### பகுதி—6.

ஜீவன் உபாதியை எப்படிப் பெறுகிறான் என்ற கேள்விக்கு அடுத்த சுலோகத்தில் விடை வருகிறது.

சரீரம் யதவாப்னோதி
யச்சாப்யுத்க்ராமதீஸ்வர:
க்ருஹீத்வைதானி ஸம்யாதி
வாயுர்கந்தானி வாசயாத்: (15-8)

''பூக்களிலிருந்து மணத்தைக் காற்று எடுத்துச் செல்வது போன்று, ஜீவன் உடல் எடுக்கும் போதும் விடும்போதும் இந்திரியங்களைப் பற்றிக் கொண்டும் போகிறான்''.

மரணத்தின் பொழுது என்ன நிகழ்கிறது என்பது இந்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது. இதை நாம் நன்கு புரிந்து கொண்டால் மரணத்தைப் பற்றிய வீண் கலக்கத்தை விட்டுவிட முடியும்.

இங்கு ஜீவன் 'ஈசுவரன்' என்று அழைக்கப்படுகிறான். 'உடலுக்குத் தலைவன்' என்பது அதன் பொருள், சரீரம், மனம், புத்திக்கு உட்பட்ட பரம பொருள் ஜீவன் என்று அழைக்கப்படுகிறது. இந்த ஜீவன் தனது ஆசைகளினால் பல இடங்களில பல உடல்களைத் தாங்குகிறது. ஆசைப பூர்த்தியே பிறப்பின் ரகசியமாகும். ஆசை அறும்பொழுது பிறவியும் இல்லாதாகிறது.

மரணத்தின் பொழுது சூக்ஷும சரீரமானது ஸ்தூல உடலிலிருந்து நீங்குகிறது. அப்பொழுது உடல் கட்டை போலக் கிடக்கிறது. பெட்ரோல் இல்லாத காரைப் போல உயிர் நீங்கிய உடல சிவம் நீங்கிய சவமாகக காட்சியளிக்கிறது.

இங்கே பகவான் ஒரு உவமானத்தால் இதை விளக்குகிறார். காற்றிற்கு தன்னளவில் ஒரு மணமும்கிடையாது. நறுமணமுள்ள பூக்களின் ஊடாக அது செல்லுகையில் அது மணமுடையதாகிறது. திரும்பவும் பூக்களிலிருந்து அதன் தொடர்பு நீங்குகையில் அது தனது யதார்த்த நிலையான மணமற்ற நிலையை அடைகிறது: அது போல ஜீவன் பிரக்ருதியுடன் வைக்கின்ற இணக்கத்தினால் பிறப்பு என்னும் தளைக்கு உட்படுகின்றான். அந்த உபாதி தற்காலிகமாக நீங்குகின்ற பொழுது மரணத்திற்கும், நிரந்தரமாக நீங்கும் பொழுது முக்தி நிலைக்கும் உட்படுகிறான்.

கழைக்கூத்தாடி ஊர்விட்டு ஊர் சென்று பிழைப்பு நடத்துபவன். அவனுக்கு எந்த ஊரும் சொந்த ஊரே. ஏதாவது ஒரு தெரு மூலையில் தனது சாமான்களையெல்லாம் விரித்து வைத்து ஜால வித்தைகளைச் செய்து காட்டுவான். தன் காரியம் முடிந்ததும் சாமான்களை மூட்டை கட்டி மற்றொரு இடத்திற்குப் புறப்பட்டுவிடுவான். அதுபோல ஜீவனாகிய ஒரு உடலில் தனது மனம் புத்தி புலன்கள் அவ்வளவையும் செயல் படுத்தி இன்ப துன்பங்களுக்கு உட்பட்டு முடிந்ததும், மனம் இந்திரியங்களை ஒடுக்கி, இன்னொரு உடலுக்குள் புகுந்து மறு பிறவி எடுக்கிறான்.

அரசாங்க அதிகாரிகளுக்கு ஒரு ஊர்விட்டு மறு ஊருக்கு மாற்றல் அடிக்கடி நிகழும். ஒரு புது இடத்தில் பதவியில் சேருகையில் அவர் தனது தட்டு முட்டுச் சாமான்களையெல்லாம் விரித்து வீட்டில் குடிபுகுவார், அங்கிருந்து மற்றொரு இடத்திற்கு மாற்றல் உத்தரவு வந்ததும் அந்த சாமான்களையெல்லாம் சுருட்டி எடுத்துக் கொண்டு புதுஊரில் புது வீட்டுக்குக் குடிபுகுந்து விடுவார், அது போலவே ஜீவனும் உடல் விட்டு உடலுக்கு மாற்றம் நிகழ்கையில் தனது பழைய சம்ஸ்காரங்கள் மற்றும் வாசனைகளை விரித்து வாழ்க்கையாகிய பயணத்தைத் தொடர்கிறது.

எனவே மரணம் என்பது நாம் நினைத்துக் கொண்டிருப்பது போல பயங்கரமானதொன்றல்ல. பழைய உடையைக் களைத்து புது உடையைத் தரித்துக்கொள்வது போல, பழைய வீட்டிலிருந்து புது வீட்டுக்குப் போவது போல அது ஒரு புதுமனை புகு விழாவேயாகும். வருத்தப்பட வேண்டியதோ, அழுது அரற்ற வேண்டியதொன்றோ அல்ல என்பதை பகவான் இங்கே சுட்டிக் காட்டுகிறார்.

இந்திரியங்களின் துணை கொண்டு ஜீவன் என்ன செய்கிறான் என்ற கேள்விக்கு அடுத்த சுலோகத்தில் விடை வருகிறது,

'ச்ரோத்ரம் சக்ஷுः ஸ்பர்சனம ச
ரஸனம் க்ராணமேவ ச।
அதிஷ்டாய மனஸ்சாயம்
விஷயானுபஸேவதே॥ (15-9)

'இந்த ஜீவன் மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் ஆகியவைகளைத் தனதாக்கிக்கொண்டு விஷயங்களை அனுபவிக்கிறான்.'

ஐம்புலன்களும், மனமும் செயல் படுகின்ற அளவுதான் நாம் உலகத்துடன் தொடர்பு கொள்ள முடியும். வீட்டில் உள்ள புலன்களாகிய ஜன்னல்கள் புற உலகைக் காண உதவுவதைப் போல், சரீரமாகிய வீட்டில் உள்ள புலன்களாகிய ஜன்னல்கள் புற உலகை அநுபவிக்கப் பயன்படுகின்றன. கணகளால் பார்க்க முடியவில்லை என்றால் ஐந்தில் ஒரு பங்கு உலகம் இங்கு நமககு இல்லை. காதும்

கேட்கவில்லை என்றால் ஐந்தில் இரண்டு பங்கு உலகம் நமக்கு இல்லை என்று பொருள். இவ்விதம் ஐம்புலன்களின் தொகுப்பு அனுபவமே இவ்வுலகம்.

உதாரணமாக அயர்ந்து உறங்கும் பொழுது கண் பார்ப்பதில்லை. தொட்டாலும் தோல் உணர்வதில்லை. மனமும் செயல்படுவதில்லை; அந்த நிலையில் நமக்கு உலகம் இல்லை என்றாகிறது.

ஐந்து பொறிகள் ஐந்து பூதங்களோடு தொடர்பு வைக்க உதவுகின்றன. ஐம்பூதங்களுக்கும் தன்மாத்திரை ஒவ்வொன்று உண்டு: ஆகாசத்தில் தன்மாத்திரையாகிய ஓசையைக் கேட்கக் காது உதவுகிறது. நெருப்பின் தன்மாத்திரையாகிய வடிவத்தைக் காண கண்ணும், வாயுவின் தன் மாத்திரையாகிய ஊறு அல்லது ஸ்பர்சத்தை உணர உடலும், நீரின் தன்மையாகிய சுவையை உணர நாக்கும், நிலத்தின் இயல்பாகிய நாற்றத்தை (அதாவது மணத்தை) உணர நாசியும் பயன்படுகின்றன. இந்த ஐந்து புலன்களுக்கும் மனம் பொதுவானதாகும்: மனத்துடன் தொடர்பு வைக்கையில்தான் இவை ஐந்தும் செயல்படவல்லவையாகின்றன. மனம் செயல்படாதபொழுது பொறிபுலன்கள் தொழில் புரிய மாட்டா. சில வேளைகளில் நாம் எதைப் பற்றியாவது தீவரமாக நினைத்துக் கொண்டிருக்கையில் முன்னால் யானை போனாலும் அதைப் பார்க்க மாட்டோம். நண்பன் உரக்கக் கூப்பிட்டாலும் அது செவியில் விழாது. என்ன காரணம்? மனம் எங்கோ இருக்கிறது. அதனால் யானையின் உருவம் கணணில் விழுந்தாலும் கண் பார்ப்பதில்லை. நண்பனின் குரல் செவியில் விழுந்தாலும் செவி கேட்பதில்லை. எனவேதான் புலன்களின் தலைவனாக மனம் அமைகிறது.

ஆட்டுக் கூட்டத்தினிடையில் வளரும் சிங்கக்குட்டியும் 'மே, மே' என்று கத்திக்கொண்டு புல் மேய்ந்தது என்று ஒரு உவமானக் கதையில் வருவது போல பொறி, புலன் மற்றும் மனத்துடன் வயப்பட்ட ஜீவன் தனது யதார்த்த நிலையை மறந்து இன்ப துன்பங்களுக்கு உட்படுவதாகத் தன்னைக் கருதி மயக்கத்தில் ஆழ்கிறது.

இத்தகைய ஜீவனுடைய உண்மை நிலையை எவர் அறிய முடியும், எவர் அறிய முடியாது என்பதை அடுத்த சுலோகம் விளக்குகிறது.

> உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி
> புஞ்ஜானம் வா குணான்விதம் |
> விமூடா நானுபச்யந்தி
> பச்யந்தி ஞானசக்ஷுஷ:|| *(15-10)*

'உடலை விடும் பொழுதும், உடலில் இருக்கும் பொழுதும், அனுபவிக்கும் பொழுதும், குணங்களோடு கூடியிருக்கும் பொழுதும் மூடர்கள் ஜீவனை அறியமாட்டார்கள். ஞானக் கண் உடையவர்கள் அறிவர்'.

ஐந்தாவது சுலோகத்தில் 'அமூடா' என்ற ஒரு வார்த்தையைப் பார்த்தோமல்லவா. அதற்கு நேர் எதிர் மறையில் வரும், 'விமூடா:' (என்றால்) என்ற வார்த்தையை இங்கே காண்கிறோம். விமூடா: என்றால் அறிவிலிகள் என்று பொருள். கச்சந்த்யமூடா; பத மவ்யயம் தத்'— 'ஞானிகள் அந்த அழியாப் பெருநிலையை அடைகிறார்கள்' என்பது முன்னால் கூறப்பட்டது. அப்படியானால் அறியாதவர்களின் நிலை என்ன என்பது இங்கே கூறப்படுகிறது.

எவர்கள் உலகப் பொருள்களில் சிக்குண்டு கிடக்கிறார்களோ, எவர்களுக்கு இதைவிட மேலான நிலை ஒன்று இருக்கிறது என்ற உணர்வு இல்லையோ அவர்கள் 'விமூடர்கள்' அல்லது அறிவிலிகள் ஆவார்கள். சதா மாறிக்கொண்டிருக்கும் இப்பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்ட அழியாத ஒரு பெருநிலை உண்டு என்பதை உணர்பவர்கள் ஞானிகள் அல்லது அறிஞர்கள். உண்டு உறங்கியே காலத்தைக் கழிக்கும் நம்மில் பலர் முதல் வகையைச் சேர்ந்தவர்கள் என்பதில் ஐயமெதுவும் இல்லை.

'உத்க்ராமந்தம் புஞ்ஜானம்'— சரீரத்தை உகுத்த பிறகு ஜீவன் வேறு பல உலகங்களில் பல்வகை அனுபவங்களைப் பெறுகிறது. சுவர்க்க லோகம் நரக லோகம், பிரம்ம லோகம் போன்ற உலகங்களில் அது தனது பாப புண்ணியங்களுக்கேற்ப இன்ப துன்பங்களை அனுபவிக்கிறது. இதைப்பற்றிய ஆராய்ச்சி விரிவாகப் பண்ணப்பட்டிருக்கிறது. மரணத்தின் பின் மனித வாழ்க்கை. 'What becomes of the Soul after death?', என்பன போன்ற ஸ்ரீ சுவாமி சிவானந்தரது நூல்களில் மரணத்திற்குப் பின் உள்ள ஜீவனது பயணம் மிக அழகாக விளக்கப்படுகிறது.

'ஸ்திதம் வா புஞ்ஜானம்'—இந்த உடலில் இருக்கும் போது அனுபவிப்பது. சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தம் ஆகியவற்றை ஜீவன் இந்த உடலில் இருக்கும்போது அனுபவிக்கிறான். ஜீவனுக்கு இந்த உடல் ஒரு வாடகை வீட்டிற்கு நிகர். தனக்குச் சொந்தமல்லாத இதை ஜீவன் தன்னுடையது என்று கருதுவது அறியாமையாகும்.

'குணான்விதம் புஞ்ஜானம்:—சத்வ, ரஜோ, தமோ குணங்களுடன் கூடியதாக அனுபவிப்பது. உடல் மூலம் நாம் பெறும் அனைத்து அனுபவங்களுக்கும் இந்த மூன்று குணங்களே காரணமாகும். சத்துவ குணத்துடன் கூடியிருக்கையில் அமைதியையும் திருப்தியையும் அனுபவிக்கிறோம். ரஜோகுணத்தின் ஆதிக்கத்திலிருக்கையில் படபடப்பும் பரபரப்பும் கூடியவர்களாக இருக்கிறோம். தமோ குணத்திற்கு வசப்பட்டிருக்கையில் சோம்பல், மறதி போன்றவற்றுக்கு உட்படுகிறோம்.

'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்பதுதான் அறிவிலிகளின் அவல நிலை. உடல் மூலம் உலகத்தில் பெறும் இன்பம்தான் அவர்களுக்குப் புலப்படுகின்றது. அதற்கு அப்பால் இருப்பது அவர்களுக்கு விளங்காத காரணத்தால் பரம பதத்தை, பரம் பொருளை நம்ப அவர்கள் மறுக்கிறார்கள். உடலைப் பார்த்து மயங்கி உடலுக்குள் உறையும் உத்தமனை அவர்கள் காண்பதில்லை. இரும்புப் பெட்டியின் அழகில் மயங்கி அதற்குள் இருக்கும் வைர நெக்லஸை மறந்திருப்பதற்கு நிகர் இது. (தொடரும்)

# பின்னவன் பெற்ற செல்வம்

கம்பராமாயணம் படைத்துக் காட்டுகின்ற பாத்திரங்களில் மிகச் சிறந்த பாத்திரம் பரதனின் பாத்திரம் ஆகும். குணமேம்பாட்டைப் பொறுத்தவரையில, இராமனைவிட மிக உயர்வாய் போற்றப்படுகின்ற நிலையில் பரதனின் பாத்திரப் படைப்பு அமைந்துள்ளது. வைணவர்கள் பரதனை 'பரதாழ்வார்' என்று உச்சிமேல் வைத்துப் போற்றுகின்றனர். திருவாய்மொழி 'கோதில் அடியார்' [8–10–9] என்று சுட்டிக்காட்டிப் போற்றுவது 'பரதாழ்வாரையே! குற்றமில்லாத மனத்தனாக ஆழ்வார்கள் உருகி, நினைத்து ஏற்றுவது பரதனையே!

இராமனைப் பெற்ற தாயான கோசலை, இராமனிடம் 'நிறை குணத்தனை, நின்னினும் நல்லனால்' என்று கூறுகின்ற அளவிற்கு குணமேம்பாடுடையவன். அது மட்டுமா! குகன் 'ஆயிரம் இராமர் நின்கேள் ஆவரோ?' என்று கூறுகின்ற அளவிற்கு கம்பனால் உயர்த்தப்படுகிறான். இராமன் தன் திருவாக்கினாலேயே தன் தாயிடம் 'நின் காதல் திருமகன் பங்கமில் குணத்து எம்பி பரதனே துங்க மாமுடி சூடுகின்றான்'—என்று கூறுகிறான்.

இக்காவியத்தில் பரதன் எவ்வளவு உயர்ந்தவனாக சித்தரிக்கப்பட்டாலும் இராமனைத் தவிர வேறு யாரும உண்மையில் அவனைப் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. இராமன் ஒருவனே பரதனின் உண்மையான சிறந்த குணத்தைப் புரிந்து வைத்திருக்கிறான்.

மிக உயர்ந்த குண மேம்பாடுடைய பரதனை இககாவியத்தின் கதைப் போக்கில்தான் ஒவ்வொருவராக அவனை உணர்ந்து புரிந்து கொள்கின்றனர். ஆயின் ஆரம்பம் முதல் இராமன்மட்டுமே அவனைப்புரிந்திருக்கிறான் என்பதைக் கம்பராமாயணம படிக்கும்போது உணர முடிகின்றது.

பரதனைப் பெற்ற தாயான கைகேயி இராமனிடம இருந்து நாட்டை பரதனுக்குக் கொடுக்க எத்தனித்த போது, கைகேயி உட்பட தசரதன், கோசலை போன்ற அனைவரும் பரதன் நாடாள்வான் என்று நம்பியே பேசுகின்றனர் ஆனால் இராமனுக்கு பரதன் நாட்டை ஏற்றுக்கொள்வான என்ற நம்பிக்கை சிறிதும் இல்லை. அதை நுட்பமாகப புலப்படுத்தும் வண்ணமே பேசசு அமைந்துள்ளது. ஆயின் அதனை வெளிப்படையாக வெளிப்படுத்த முடியாதபடி சூழ்நிலையும் அமைந்துள்ளது.

பரதனைப் பெற்ற தாயான கைகேயியே பரதனைப் புரிந்து கொள்ளவில்லை. இதைவிட பரதனுக்குக் கொடிய துன்பம் உண்டா? தான் ஏதோ பரதனுக்கு நன்மை செய்கிறோம் என்ற நோக்கில் எத்தனை பெரிய இக்கட்டான நிலைக்குப் பரதனைக் கொண்டு வந்து நிறுத்தி விடுகிறாள். ஆயின் அதுவே பரதனுக்கு நலமாயிற்று எனலாம். யார் யாரெல்லாம் பரதனைப் புரிந்து கொள்ளாமல் இருந்தார்களோ, அத்தனைப் பேரும பரதனைப் புரிந்து கொள்ளும் ஒரு சந்தர்பபத்தை உருவாக்கித் தந்தவள அவளே என்று சொன்னால் அதுவே முற்றிலும் உண்மையான வார்த்தையாகும.

மிகச் சிறிய பாத்திரமாகத் தோன்றிமனதில்நிற்காமல் மறைந்து விடப்போன பரதனை, மிகச்சிறந்த குணமேம்பாடுடையவனாக உலகிற்கு அறிமுகப்படுத்தி என்றும் நீங்காமல் நெஞ்சில் நிற்கின்ற பாத்திரமாக மாறுகின்ற நிகழ்ச்சியை உருவாக்கிய கைகேயியை எத்தனைப் புகழ்ந்தாலும் தகும்;

ஆனால் கைகேயி பரதனைப் பெற்றெடுத்தாலும், அவனுடைய மனதைப் புரிந்து வைத்திருக்கவில்லை. தெய்வக் கற்பினளான அவள், கூனியின தீய போதனையால் தூய சிந்தையும் திரிந்து, தயரதன் முன்னர் தருவதாய்ச் சொன்ன வரங்கள் இரணடை வேண்டுகின்றாள்:

''ஏய வரங்கள இரண்டின் ஒன்றினால் என்
சேய்உல காள்வது; சீதை கேள்வன் ஒன்றால
போய்வனம் ஆள்வது; எனப்புகன்று நின்றாள்
தீயவை யாவையினும் சிறந்த தீயாள'
(கைகேசி சூழ்வினைப் படலம்-10)

திரு. வ. ஜோதி, M.A.,
புதுப்பேட்டை

இதனால் தன்மகன் கண்டிப்பாய் நாடாள்வான் என்று கைகேயி நம்பினாள் என்று வெளிப்படையாகத் தெரிகின்றது.

ஆயின் பரதன் எத்தகைய உயர்ந்த சிந்தையன், குணக்குன்று எனபதை அவள் புரிந்து கொள்ளவில்லை. பரதன் மூலமாய் அவள் பெற்றது பழிதான அது மட்டுமா?

இராமனைப்பற்றி ''தெவ்வடு சிலையினாய்! தேவி தம்பி என்று இவவிருவரோடும் கானகத்தான்'' என்று அவள் கூறியவுடன், பரதன் அடைகின்ற மாற்றங்கள், அவனை நிறை குணத்தனாய்க் காட்டுகின்றது. பின்னர் அவன் தன் தந்தை தயரதனை எண்ணி ''பெற்றவன் இருக்க

வே பிள்ளை கான்புக உற்றதென்? பின் அவன் உலந்ததென்?'' என்றான். அப்போது கைகேயி வாக்காய் வரும் பாடல் இது.

'' வாக்கினால் வரம்தரக் கொண்டு,
மைந்தனை
போக்கினேன்; வனத்திடைய
போக்கியபார உனக்கு
ஆக்கினேன்: அவன்அது பொறுக்க
லாமையால்
நீக்கினான் தன்உயிர் நேமிவேந்
தென்றாள ''

*பள்ளிப்படைப்படலம் 861*

இதைக் கேட்டதும் பரதன் அடைநத கொதிப்பை வர்ணிக்கின்ற கம்பர் அவனின் உயர்ந்த பண்பை படிப்பவா நெஞ்சில் மிக எளிதாய் ஏற்றி விடுகின்றார்.

தனனுடைய மகன் நிலை உயர வேண்டும். அவன் நாடாள வேண்டும் என்று ஒரு தாயுள்ளம் விரும்பியதில் தவறில்லை. ஆயின் தனக்குச் சூழ்நிலைகள் ஏற்ற முறையில் இருந்தும், தகுதி இருநதும், தன் அண்ணன்மேல் கொண்ட மாறாக் காதலினால் நாட்டை ஏற்க மறுத்த பரதனின் சிறந்த பணபு இங்குதான் பளிச்சிடுகின்றது.

இவ்வாறு தாய்தான் நாடாள வேண்டும் என்று விரும்பி தந்தையிடம் அதனை வரமாகப் பெற்றாலும், தந்தையாவது பரதன நாடாளமாட்டான் என்று சொனனானா, அன்றி திடமாய் நம்பினானா! இல்லையே. தந்தை தயரதனும பரதன் நாடாளச் சமமதிப்பான் என்றே எண்ணுகின்றான். அவ்வாறு அவன் நம்பியதால் தான் சற்றும் சிந்தை இரங்காத கைகேயியைப் பற்றி இவள் என் தாரம் அல்லள், வருகின்ற பரதன் தான் ஒரு மன்னன் ஆவான். ஆயின் என் மகன் ஆகான் என்று கூறுகின்றான். இதனைக கம்பன்,

'' இனனே பலவும் பகர்வான் இரங்கா
தாயை நோக்கிச்
சொனனேன இன்றே இவள்என்
தாரம அலலள் துறந்தேன்;
மனனே ஆவான் வருமஅப் பரதன
தனையும மகன்என்று
உன்னேன் முனிவா அவனும்
ஆகான் உரிமைககு என்றான்''

*அயோத்தியா காண்டம் 345*

என்று கூறுகிறான்.

பரதன் நாடாள்வான் என்று அவன் கருதியதால்தான் அவனை மகன் இல்லை என்று கூறிவிடடு மாண்டு போகின்றான். ஆகவே பெற்ற தந்தை கூட பரதனை நன்கு புரிந்து கொள்ளவில்லை.

இவர்கள் இருவர் மட்டுமா பரதனின் உண்மைக் குணத்தைப் புரிந்து கொள்ளவில்லை? அவனை வளர்த்தவள் ஆன கோசலை கூடப் புரிநது கொள்ளவில்லை? என்ன துன்பமிது! குலம், பொறை, கற்பு இவை சுமநத கோசலையும் தன் மனதிலே சிறிது ஐயம் வைத்திருந்தாள். அவ்வையம் பரதனைக் கண்டபின் ஐயோ மகனே கைகேயன் பெற்றவளான நின்தாய் இழைத்த கொடுமை நீ அறிந்து கொளளவில்லை போலும்? என்று கூறித் தன் சந்தேகம் தீர்க்கின்றாள். அப்போதுதான், அதுவும் அவள் காலடியில் பரதன் அழுது புரணட போதுதான், மனத்தாலும் சிறிதும களங்கம் இல்லாதவன் பரதன் என்று உணர்கின்றாள். இதனைக் கம்பன்,

'' மையறு மனத்தொரு மாசுளான்
அலன்
செய்யனே என்பது தேரும்
சிந்தையாள்
கைகயர் கோமகள் இழைத்த
கைதவம
ஐயநீ அறிந்திலே போலுமால்
என்றாள் ''

*அயோத்தியா காண்டம் 891*

என்று கூறுவதாய் அமைத்துக்காட்டுவான்.

இவ்வாறு கோசலையும் பரதனைப் புரிந்து கொள்ளவில்லை. காப்பிய நாயகனான இராமன மட்டுமே அவனை நன்முறையில் புரிநது வைத்திருக்கிறான். ஆயின அவளிடம இராமன் 'பங்கமில் குணதது எம்பி பரதனே துங்க மாமுடி சூடுகின்றான்'— என்று கூறுகிறான். பரதன் மாமுடி சூடுவான என்று நம்பாத இராமன் இவ்வாறுக் கூறக் காரணம் என்ன? பரதனை நன்முறையில் உணர்ந்த இராமனின் இககூற்று எண்ணிப் பார்க்கத் தகுந்த ஒன்று.

★

## ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில், திருப்பதி.

| ஆர்ஜித சேவைகள் | கட்டணம் | நேரம் |
|---|---|---|
| 1. அபிஷேகம் | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | காலை 9-30 முதல் 10-00 வரை |
| 2. ஸகஸ்ரநாமா அர்ச்சனை | ரூ. 1/- நபர் ஒருவர்ககு | மாலை 5-00 முதல் 6-00 வரை |

**பிரஸாத கட்டண விவரங்கள்**

| | | | |
|---|---|---|---|
| 1) | புளியோதரை | — | ரூ. 50-00 |
| 2) | பொங்கல் | — | ரூ. 55-00 |
| 3) | தத்யோதனம் | — | ரூ. 40-00 |
| 4) | சர்க்கரைப் பொங்கல் | | ரூ. 65-00 |
| 5) | தோசை | — | ரூ. 35-00 |
| 6) | ஸீரா | — | ரூ. 155-00 |
| 7) | கேஸரிபாத் | — | ரூ. 85-00 |



# இராவணன் பெற்ற சாபங்கள்



புலவர் மு. மணி, எம்.ஏ., பிஎட்.,
வேலூர்

முகவுரை:

இராமாயணம் என்னும் பெருங் காவியத்தைக் கம்பரென்னும் கவிஞர் வான்மீகியின் இராமகாதையை முதனூலாகக்கொண்டு இயற்றியருளினார். இராமபிரானைத் தெய்வநாயகனாகப் படைத்த கம்பர் தம் காவியத்தைப் பக்திச் சுவை நிரம்பியதொரு நூலாகவே படைத்துள்ளார். கம்பகாவியமாகிய இராமபிரானது வரலாற்றைப் பக்தி நெறியில் சென்று கண்டால்தான் நாம் அச்சுவையை உணரமுடியும். திருமாலின் எட்டாவது அவதாரமாக விளங்குவது இராமாவதாரமாகும். முன்னொரு காலத்தில் இராவணன் முதலான அரக்கர்களின் கொடுமைகளுக்குள்ளான தேவர்களனைவரும் ஸ்ரீமகாவிஷ்ணுவைச் சரணடைந்து வேண்ட அப்பிரான் தசரத சக்கரவர்த்தியின் திருமகன் ஸ்ரீராமனாய் திருவவதாரஞ்செய்து அரக்கர்களை யழித்து நல்லோரைக் காத்தருளினார். இராமாயணத்தின் நாயகனாகிய இராமபிரான் சீதையை மணந்து கைகேயியின் இருவரங்களினால் இலக்குவனுடனும், சீதையுடனும் கானகம் சென்று தங்கியிருந்தபோது, இலங்கையின் அரசனான இராவணன் அச்சீதையைக் கவர்ந்து சென்றான். சீதையைக் காணாமல் மனம் வருந்திய இராமபிரான் அனுமன் மூலம் சீதையின் இருப்பிடத்தையறிந்து இராவணனோடு போரிட்டுச் சீதையை மீட்டு அயோத்தி திரும்பி பட்டாபிஷேகஞ் செய்து அரசாண்டார். இதுவே இராமாயண காவியத்தின் சுருக்கமாகும். இவ்இராமகாதையுள் சீதையைக் கவர்ந்து சென்ற இராவணன் அச்சீதையை இராமபிரானிடம் கொண்டு சென்று சேர்ப்பதே சிறந்த செயலாகுமென வீடணன் முதலானோர் கூறியும் கேளாதவனாய் இராமபிரானுடன் போரிட்டு இறுதியில் மாண்டான். இராவணனது அழிவுக்குக் காரணங்களாக இரு சாபங்களும் உள்ளன. அச்சாபங்களை இனிக் காண்போம்.

வேதவதியின் சாபம்

முன்னொரு காலத்தில் குஷத்துவஜ முனிவர் என்பவர் வாழ்ந்து வந்தார். அம்முனிவருக்கு அழகிய பெண் குழந்தை பிறந்தது. முனிவர் வேதம் ஓதுகையில் அப்பெண் குழந்தை பிறந்ததால் பெற்றோர் அக்குழந்தைக்கு வேதவதி என்று பெயரிட்டனர். வேதவதி நாளொரு மேனியும்பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து மணப்பருவம் அடைந்தாள். அவ்வேதவதியின் பேரழகைக் கண்ட தேவர்களும், அசுரர்களும் அவளை மணக்க விரும்பி குஷத்துவஜ முனிவரிடம் பெண் கேட்டனர். முனிவரோ தன் மகளுக்குக் கணவனாகத்தக்கவர் திருமால் ஒருவரே என முடிவு செய்திருந்தார். ஆகவே தன் மகளை மணம் பேசி வருபவர்களுக்கு மணம் செய்து வைக்க மறுத்து வந்தார். வேதவதியும் தனக்கு மணாளனாகத் தக்கவர் திருமாலே என எண்ணி வாழ்ந்து வந்தாள். ஒரு நாள் சம்பு என்ற அரக்கனொருவன் வேதவதியை மணந்து கொள்ள விரும்பி குஷத்துவஜரிடம் வந்தான். முனிவர் அச்சம்புவுக்குத் தன் பெண்ணை மணம் செய்து தர மறுக்கவே அவ்வசுரன் குஷத்துவஜ முனிவரைக் கொன்று விட்டான். முனிவர் இறந்துபோகவே அவரது பத்தினியும் சோகத்தால் உயிர் துறந்தாள். தந்தையையும் தாயையும் இழந்த வேதவதி திருமாலையே நாயகனாக அடைய எண்ணி வனத்தில் தவம் புரிந்து வந்தாள். திக்கு விஜயம் செய்யும் பொருட்டு அவ்வழியாக வந்த இலங்கை யரசன் இராவணன் பேரழகு கொண்ட வேதவதி தவம் செய்வதைக்கண்டான். அவளழகைக் கண்டு மயங்கித் தன்னை மணந்து கொள்ளுமாறு வேதவதியை வேண்டினான். வேதவதி இராவணனை மணக்க மறுத்தாள். கோபமடைந்த இராவணன் வேதவதியை வலிதில் சென்று பற்றினான். அதனால் சின மடைந்த வேதவதி இராவணனை நோக்கி "இராவணா! பிரம்மன் அளித்த வரத்தின் வலிமையால் நீ செருக்குற்று என்னை வலிதில் பற்றினாய். நான் மறுபிறவியில் உனக்கும், இலங்கைக்கும் கேடு விளைவிப்பவளாகப் பிறப்பேன். இது உறுதி" என்று சபதமிட்டு விட்டு நெருப்பில் மூழ்கினாள். அவ்வேதவதி சபதமிட்டவாறே மறுபிறவியில் சனகனுடைய மகளாகச் சீதையென்னும் பெயரோடு அவதாரம் செய்தாள். சீதை ஸ்ரீராமபிரானை மணந்தாள். தன்னைக் கவர்ந்து சென்று அசோகவனத்துள் இராவணன் சிறை வைக்க ஸ்ரீராமபிரான் அவனுடன் போரிட்டு வென்று சீதையை மீட்டார். வேதவதியின் சபதம் நிறைவேறியதல்லவா?

நந்தி தேவனின் சபதம்

முன்னொரு காலத்தில் இராவணன் குபேரனை வென்று புஷ்பக விமானத்தைக் கைப்பற்றி அதன் மேலமர்ந்து இலங்கை நோக்கிச் சென்றான். அவ்வாறு அவன் செல்லும் வழியில் சிவபெருமான் குடிகொண்ட கைலாய மலையின் மேல் அவ்விமானம் செல்லாமல் தடைப்பட்டு நின்றது. விமானம் செல்லாமல் தடைபட்டு நின்ற காரணத்தைப் பற்றி இராவணன் சிந்தித்துக் கொண்டிருந்தபோது சிவ

கண நாதருள நந்திதேவன் அங்குத் தோன்றினன்; நந்திதேவன் இராவணனுக்குக் கைலாயமலையின் பெருமையைக் கூறி அம்மலையின் மீது செல்லாது விலகிச் செல்லுமாறு அறிவுரை கூறினன். நந்திதேவன் கூறிய அறிவுரையை இராவணன் ஏற்காததோடு அந்நந்திதேவனை குரங்கு முகமுடையாய் என்று ஏளனமும் செய்தான். அதனால் கோபமடைந்த நந்திதேவன் இராவணனை நோக்கி "இராவணா! நீ என்னை குரங்குமுகமுடையவனென இகழ்ந்து பேசியதால் குரங்குகளே உன் குலத்தோரை அழிக்கும்" என்று சபித்தான். அச்சாபத்தின் காரணமாகவே அனுமனும், சுக்கிரீவனும் அவனது குரங்குப் படைகளும ஸ்ரீராமபிரானுடன் சேர்ந்து இலங்கை வேந்தனை இராவணனுடன் போரிட்டு இராவணனின் குலத்தோரை அழித்தனர்.

முடிவுரை

இலங்கை வேந்தனை இராவணன் பெருவீரனாக இருந்தும் பெண்ணொருவரை காரணமாகத் தன் குலத்தோருடன் தானும் அழிய நேரிட்டதென்பதை இராமாயணம என்னும் காவியம் புலப்படுத்துகிறது. கல்வி யறிவு, ஒழுக்கங்களிற் சிறந்த பெரியோர்கள் (ஆணாயினும், பெண்ணாயினும்) மனம நோகும்படி செய்தால் அவர்கள் அதைப் பொறுத்துக் கொள்ள மாட்டார்கள். அவர்களது கோபத்தால் சபித்தால் அச்சாபம் நிறைவேறுமென்பதை வேதவாக்கு. நந்திதேவன ஆகியோர் மூலமாகக் கம்பர் எடுத்துக் காட்டியுள்ளார். இக்கருத்தையே திருவள்ளுவ நாயனாரும்,

குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தலரிது

என்று குறட்பா மூலம் கூறியிருப்பது ஈண்டு நோக்கற்பாலது. கோவலன் கண்ணகியுடன் மதுரைக்கு நடந்து சென்றபோது அவர்களுடன் கவுந்தியடிகள் என்ற பெண் துறவியும்சென்றார். அவர்களை இரு வயதில் இளைய வர்கள் ஏளனம் செய்ததாகவும் அதனால் கோபமடைந்த கவுந்தியடிகள் அவர்களை நரிகளாகும்படி சபித்ததாகவும் சிலப்பதிகாரம் மூலம் அறிகிறோம். எனவே கற்புடைய பெண்களையும், சான்றோர்களையும நாம் துதித்து வாழ்வதே சிறந்த வாழ்வாகுமென்பது கம்பர் பாடிய இராமாயண காவியத்தின் மூலம் நாமறியும் நீதியாகும்.

# பஞ்ச ஸம்ஸ்காரம்

ஸ்ரீ பாவனுச்சார்ய ஸவாமி—திருச்சி-6.

அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது. அதிலும் ஸ்ரீவைஷ்ணவ சமயச் சார்பினனுகப் பிறப்பதுஅரிது. ஸ்ரீவைஷ்ணவனுகப் பிறந்தானொருவன் ஸ்ரீமந்நாராயணனையே பரதெய்வமாக நினைத்து அவ்விறைவன் விஷயத்தில் செய்யும் கைங்கர்யமே பரம புருடார்த்தமாகக் கொண்டொழுகுவான். இந்த ஸ்ரீவைஷ்ணவததில் பிறந்தானொருவனுக்கு அகச்சுத்திப் புறச்சுத்தி என்ற இரண்டு சுத்தியுமிருத்தல் வேண்டும். அவற்றுள் அகச்சுத்தியாவது மனததிலுள்ள காம க்ரோதாதிகளை விடுதது 'மனத்துக் கண் மாசின்றி' எம்பெருமானிடத்தில் தூய அன்புற்றிருத்தலாகும். புறச்சுத்தியாவது 'சங்க,' 'சக்ராதி' லாஞ்சனங்களைப் பெற்று பகவதாராதனை செய்து 'பகவத் பாகவதாசார்ய' கைங்கர்ய ஸ்வரூப நிஷ்டனுயிருக்கை. ஸ்ரீவைஷ்ணவனுயிருப்பவனுக்கு 'பஞ்ச ஸம்ஸ்காரம்' இன்றியமையாதது. பஞ்ச ஸம்ஸ்காரங்களாவன: ''தாப: புண்ட்ரஸ் ததாநாம மந்த்ரோ யாகஸ்ச பஞ்சம: என்றபடியே 1. தாபம், 2. புண்ட்ரம், 3. நாமம், 4. மந்த்ரம் 5. யாகம் என்பன. இவற்றை ஸ்ரீவைஷ்ணவர்களாகப் பிறந்தவர்கள் ஒவ்வொருவரும் ஆசாரயன் மூலமாகப் பெற்றுக்கொள்ளவேணடும. இந்தப் பஞ்ச ஸம்ஸ்காரங்களுள் 1. தாபமாவது: ஓமத் தீயில் தகிக்கப்பட்ட 'சஙக' சககரங்களைத் தோள்களில் தரித்துக்கொளளுதல். ''தீயிறபொலிகினற செஞ்சுடராழித் திகழ்த்திருச் சககரததின் கோயிற் பொறியாலே யொத்துண்டு நின்று குடிகுடியாட் செய்கின்றேம்'' என்று பெரியாழ்வார் அருளிச் செய்ததினுலும் ஸர்வேச்வரனுடைய அடியார்கள் 'சங்க' 'சக்ர' இலச்சனையைப் பெற்றுக் கொள்ளுதல் மிகமிக முக்கியமானது என்பதை அறியலாம். 2. புண்ட்ரம்: நெற்றி முதலிய பன்னிரண்டு இடங்களில் ஊர்த்துவ புண்ட்ரங்களை அணிந்து கொள்ளுதல். ஸ்ரீவைஷ்ணவனுயிருப்பானொருவன் தினமும் திருமணகாப்பு அணியவேண்டும். திருமண காப்பு அணியத் தவறுவது அல்லது தயங்குவது தற்கொலைக் கொப்பாகும். எனவே அதை அணிந்து கொள்ளுதல் மூலம் எந்தவிதமான தீமையும் அணடவொட்டாமல் விரட்டியடிக்கும உத்தம ரகைஷயாகும். இதனுலேயே இதைத் ''திருமண் காப்பு'' என்கிறேம். 3. நாமம்: ஆசார்யன் திருவாக்கால் ''இராமானுஜ தாஸன்'' என்ற தாஸ்ய நாமத்தைப் பெறுதல். 4. மந்த்ரம்; ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய ரஹஸ்யங்கள் எனப் போற்றப்படும் 1. திருமந்திரம், 2. துவயம், 3. சரமஸலோகம் என்ற மூன்று மந்த்ரங்களும் ஆசார்யன் மூலம் லபித்து அதிலேயே ஊன்றியிருக்கை.



தத்துவமுஞ் சாதனமும்
பயனுங்காட்டுந்
தாரமுத லிருநான்குந் தன்
கருத்தான்
முத்திவழி நாமுயலும்வகையே காண
முகுந்தனிசைத் தருள் செய்த
வைந்நாலேந்தும்
பத்தி தனிற படியில்லா பரஞ்
சுமத்தப
பார்த்தன் றேர் முனனே
தாழுந்தாழ நின்ற
வுத்தமனு ருத்தமநல் லுரை
நாலெட்டு
முணர்ந்தவர்தா முகந்தெம்மை
யுணர்வித்தாரே;

என்று ஸ்ரீஸ்வாமி தேசிகன், 'அமிருதா சுவாதினி' பாசுரத்தில் ஸாதித்துள்ளபடி, ஸ்ரீவைஷ்ணவர்கள் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்து கொள்ளும் சமயத்தில் ஆசார்யனால், அர்த்தத்துடன் உபதேசிக்கப்படுகின்றன. 'மந்த்ராணாம் பரம:' என்ற பிரமாணத்தின்படி திருவஷ்டாக்ஷர மந்த்ரத்துக்கும், துவயத்திற்கும், மந்த்ரங்களுககுள்ளே மிகச் சிறந்த மந்த்ரம் என்ற பெருமையினால், "மந்த்ர ரத்னம்' என்று போற்றப்படுகின்றது. ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன் அருளிச் செய்துள்ள ரஹஸ்யத்ரயஸாரம் என்கிற திவ்விய கிரந்தத்தில இவைகளின் தாத்பர்யங்களை பரக்கக் கண்டு அனுபவிககலாம. 'பஞ்ச ஸம்ஸ்காரம்' ஆன ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமந்த்ரம், துவயம, சரம ஸ்லோகம ஆக இம் மூன்று மந்த்ரங்களையும், ஸந்த்யா வந்தனம செய்யும் போது ஜபிக்க வேண்டும். திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தை ஜபிப்பவர்கள் எட்டுச சிறந்த குணங்கள் வாய்ந்த விவேகிகள என்று குறிப்பிட்டு, அங்ஙனம் அனுஸந்திப்பதன் மூலம் அஹிம்ஸை, இந்திரியங்களை அடககுதல், எல்லா ஜீவராசிகளிடமும் கருணை, பொறுமை, ஞானம், தபஸ், த்யானம், ஸத்யம் ஆகிய எட்டு மலர்கள் என்ன, யோகத்தின் எட்டு அங்கங்களென்ன அஷ்டைச்வர்யங்களென்ன, அஷ்ட மஹா குணங்களென்ன, அறுபத்து நான்கு கலை ஞானமென்ன, எட்டு ரஸங்களுக்கும் உயர்ந்த ஒன்பாவது ரஸமான சாந்தி என்னும் ரஸமென்ன ஆகிய இவைகள் எல்லாம் சித்திக்கும் என்று பலன் கூறி திருவஷ்டாக்ஷரத்தின் பெருமையை மிக அழகாகத் தலைககட்டுகிறார் ஸ்வாமி தேசிகன். 5. யாகம: பகவதாராதனமாகும். சாளக்ராமமூர்த்தியாகிற எம்பெருமானையாவது (அல்லது) எம்பெருமானின் திவ்யமங்கள அர்ச்சா மூர்த்தியையாவது எழுந்தருளச் செய்து ஆராதிப்பது பல யாகங்களைச் செய்ததைக் காட்டிலும் பல மடங்கு அதி ச்லாகயமானது. இருளைப் போக்கடிக்க ஒளி எவவளவு முக்கியமானதோ, அதேபோல ஸ்ரீவைஷ்ணவனாயிருப்பவனுக்கு பஞ்ச ஸமஸ்காரங்களை ஆசார்யன் மூலம செய்து கொள்ளுதல மிக, மிக முக்கியமான தாகும். இந்தப் பஞ்ச ஸமஸ்காரங்களைச் செய்து கொள்ளாதவன் ஒருக்காலும் ஸ்ரீவைஷ்ணவன் என்றழைக்கவோ ஆழ்வார்கள் அருளிச்செய்த தமிழ் மறைகளைப் பயில்வதற்கோ, முக்கியமாக பகவதாராதனை செய்வதற்கோ, பித்ருயக்ஞமான ச்ராத்த, தர்ப்பண கைங்காயங்களைச் செய்வதற்கோ, ஒருக்காலும் யோக்கியதையுடையவனாக மாட்டான். அப்படியே ஒருவன் அனுஷ்டித்தானாகிலும் அவனுக்கு பஞ்ச ஸம்ஸ்காரம் இல்லையேல், விழலுக்கு இறைத்த நீரைபபோன்று பயனற்றதாகிவிடும். பேரருளாளன் திருககச்சி நம்பிகள மூலமாக "உடையவருககுப் பெரிய நம்பிகளையடைநதுபஞ்ச ஸமஸகாரங்களைப் பெற்றுககொள்ளவேணடும" என்று நியமனமளித்த பிறகு உடையவர் விரைந்து பெரிய நமபிகள் எழுநதருளியிருககும் ஸ்ரீரங்கத்தை நோக்கி வருகிற காலததில் இடையில மதுராந்தகம் என்கிற திவ்விய தேசத்தில், பெரிய நம்பிகளைச் சந்தித்து, "சரீரம் நிலைத்து நிற்கும் இயல்பினையுடையதில்லையாதலால், அடியேனுக்கு இப்பொழுதே பஞ்ச ஸம்ஸ்காரம் செய்தருள வேண்டும்" என்று ப்ரார்த்திக்க, பெரிய நம்பிகளும் இவருக்கு உடனே, அப்பொழுதே பஞ்ச ஸம்ஸ்காரஞ் செய்தருளினார். இதனால் ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும காலவிளம்பமின்றிப் பஞ்ச ஸம்ஸகாரத்தைப் பெற்றுக்கொளள வேண்டும் என்பது விளங்கும். இந்தப் பஞ்ச ஸம்ஸ்காரத்தின் பெருமையைக குறிதது வேதம், ஸ்ம்ருதி, இதிஹாசங்கள் முறையிடுகின்றன.

"வேதனுக்குந் தந்தையாய்ப் பல்லுயிர்க்கு மந்திரியாமியுமாய் நின்ற மாதவன்றன சக்கரமும் வலம் புரியும் வலத்தோளும் வாமத்தோளும், சோதிபெறவனன் முகத்திற்றரிப்பவர்கள பரமபதந்தொடர்வாரென்று கோதை நல்லா பெசுர் வேதாரணத்தின் முதற்பருசசமது கூறுமன்றோ". மேலும் சங்க, சக்ர தாரணமுள்ள ஸ்ரீவைஷ்ணவனிடததில் யம கிங்கரர்களும் அணுகமாட்டார்கள். இதனை ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் யமன் தனது கிங்கரர்களை நோக்கி கூறுமிடத்து, "ஸ்ரீவைஷ்ணவோத்தமர்களைக் கணடாலும், அவர்கள் சங்க, சக்ர லாஞ்சனமுடையவராக இருப்பரேல் அவர்களை ஒருக்காலும் நீ நெருங்காதே" என்று ஆக்ஞையிடுகிறான். மேலும் ஸ்ரீபாகவதத்தல கணணபிரான துவாரகையை விட்டுச செனற காலத்தில் துவார பாலகரை நோககி 'யான் இங்கு வரும் வரை, சங்க, சக்ர தாரணமிலலாதவரை நகரில புக விடாதீர்கள்' என்று கட்டளையிட்டதனாலும், ஸ்ரீவைஷ்ணவாகட்குச் சங்க சகர தாரணம மிகவும் இன்றியமையாதது எனபது கையிலஙகு நெல்லிக்கனியென விளங்கும.

மேலும் பகவத் ஸ்ரீராமானுஜர் திருக்குறுங்குடியை அடைநது அங்கு எழுநதருளியிருக்கும் திருககுறுங்குடி நம்பியை மங்களாசாஸநம செய்ய, திருக்குறுங்குடி நமபியும் மிகவுகந்து— "யதிராஜரான எம்

பெருமானுரே! இந்த ஜனங்களை ரக்ஷிப்பதற்காக, ஸ்ரீதேவியோடுகூட நம்மால் ராமன், கிருஷ்ணன் முதலான பல அவதாரங்களை எடுத்தும், ப்ராக்ருதர்களாய் பாபம் நிறைந்த எல்லா ஜனங்களும், என்னை, ஓர் அரசனுகவும், இடையனுகவும் எண்ணினுர்களே ஒழிய 'நம்மை ரக்ஷிப்பதற்கு எம்பெருமானே வைகுண்டத்திலிருந்து எழுந்தருளியிருக்கிறுன்' என்று எணணவில்லே. அவர்களும் அஸுர ஸ்வபாவத்தை உடையவர்களாய் இருந்தபடியாலே அவர்களில் எவனும் ஜகத் காரணனுய், பரமாத்மாவான என்னை அடையவில்லே. அப்படிப்பட்ட அவர்கள் அனைவரும் எந்த உபாயத்தினுல் இவ்வாறு உம்மால் வசப்படுத்தப்பட்டார்கள். அவ்வுபாயத்தை விரைவில் கூறுவீர'' என்று கேட்க ராமானுஜரும் 'கேட்க வேண்டிய முறையில் கேட்டால் விரைவில் கூறுகிறேன்' என்று விண்ணப்பிக்க, உடனே திருக்குறுங்குடி நம்பியும், எம்பெருமானுருக்கு திவ்விய சிம்ஹாஸனத்தை அளித்து, உயர்ந்ததான தன் சிம்ஹாஸனத்தினின்றும் இறங்கி, பக்தியோடுகூடியவராய் நிற்க, ஸ்ரீராமானுஜரும், திருக்குறுங்குடி நம்பியின் செவியில் ''எல்லா மந்திரங்களேக் காட்டிலும் சிறந்ததாகையாலே 'மந்த்ர ரத்னம்' எனப்படுவதாய், மங்களங்களை அளிப்பதாய்,பல பெருமைகளைத் தன்னகத்தே உடைய, 'மந்த்ர ரத்னம', 'த்வயம்', ந்யாஸம், ப்ரபத்தி, ஸரணுகதி, லக்ஷ்மீ நாராயணன, ஹிதம, ஸர்வ பலப்ரதம் ஆகிய மந்த்ர ரதனத்தின் பல பெயர்களை என்னிடத்தில் கேட்பாய்'' என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட ரீதியில் மந்த்ர ரத்னத்தைப் புகழ்ந்து, அம்மந்திரத்தின் சொற்பொருளையும் உபதேசித்து, 'வைணவ நமபி' என்ற தாஸ்ய நாமத்தையும் அளித்தார். உடனே திருக்குங்குடி நம்பியும் மிகவுகந்து ஆசார்யரான ஸ்ரீராமானுஜருக்கு 'ப்ரஹ்மரத'' மரியாதைசளைச் செய்து மிகவும் உகந்தருளினுர். எனவே ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவ இளைஞர்களும், 'உபநயனம்' ஆன உடனேயே, அவரவாகளின் குடும்பத்திற்குரிய ஆசார்யனிடம் சென்று ''பஞ்ச ஸம்ஸ்காரம்'' செய்து கொள்ளவேண்டும். ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒவ்வொருவரும் பஞ்ச ஸம்ஸ்காராதிகளைச் செய்து கொள்வதோடல்லாமல், தினமும் பகவதாராதனே, செய்து வரவேணும். பகவதாராதனே செய்யவேண்டியதன் அவசியத்தை ஸ்ரீபகவத் கீதை மூன்றுவது அத்தியாயத்தில் பகவான் வற்புறுத்துகிறுன். ''பகவானுல நமக்குக் கொடுக்கப்பட்ட திரவியங்களை பகவானுக்கு நிவேதனம் செய்யாமல் சாபபிட்டால் அது திருடுவதற்கு சமம். இந்திராதி தேவர்களுக்கும ஆதமாவாக இருக்கிற பகவானை ஸந்தோஷப்படுத்துவதற்காகவே திரவியங்களைச சேகரம் செய்து பக்குவப்படுத்தி, பகவானுககுக் கண்டருளப் பணணி பகவான் அமுது செய்த சேஷத்தை உட்கொண்டு எவர்கள் சரீரத்தை வளர்க்கிறுர்களோ அவர்களுக்கு எல்லாவித பாபங்களும் நிவர்த்தியாகி மோக்ஷப் பிராப்தி நிச்சயமாக உண்டு. எவர்கள் பகவனுல் கொடுக்கப்பட்ட வஸ்துக்களை, தங்கள் சுகத்துக்காக ஏற்பட்டது என்று கருதி, எவர்கள் பகவானுக்கு நிவேதனம் செய்யாமல் சாப்பிடுகிறுர்களோ, அவர்கள் மகத்தான பாவங்களைச் செய்தவர்களாகி நரகத்தை அடைவர்''என்று பகவத் கீதையின் மூன்றுவது அத்தியாயம் 12வது 13-வது ஸ்லோகங்களின் கருத்து எனபதை ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச் செயத 'கீதா பாஷ்யத்தில்' பரக்கக் காணலாம். ஸதாசார்ய ஸம்பந்தம் பெற்று பஞ்ச ஸம்ஸ்காரம் ஆனவர்களே, 'பகவதாராதனம்' செய்யவேண்டும். பகவதாரானம் செய்பனே பாகவதோத்தமன். எனவே, 'கால விளம்பமின்றி ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒவ்வொருவரும், ஆசார்யனை அடைந்து, 'பஞ்ச ஸம்ஸ்காரம்' செய்துகொண்டு, பகவதாராதனை செய்து வருதல் மிகவும் முக்கியமானது என்பதை அறியலாம். ''பஞ்ச ஸம்ஸ்காரம்'' ''பருவத்தே பயிர் செய்'' என்பது போல, உபநயனம் ஆன உடனேயே செய்து கொள்ளுதல் உத்தமம். ஐம்பது வயதை நெருங்கும் சமயத்தில் செய்து கொள்ளலாம் என்று தள்ளிப் போட்டு, அதன்படி செயல்படுதல் மத்திமம். இது இரண்டும் இன்றி செய்து கொள்ளாமல் இருப்பது, அதமத்தோடன்றி, இதைப்போன்ற மாபெருந் தவறுகள் இருக்க முடியாது. என்வே ஒவ்வொருவரும் நன்கு இதை உணர்ந்து, கால தாமதமின்றி ஆசார்யனை ஆச்ரயித்து,'பஞ்ச ஸம்ஸ்காரம்' செய்துகொண்டு, பகவதாராதனை செய்துகொண்டு, மந்திரங்களுள் மாணிக்கமாய், ஸுடமளிப்பதாய், வேதஸாரமாய், பழையதாய், எல்லாப் பாபங்களையும் அழிப்பதாய் எல்லாப் புண்ணியங்களையும் வளரச் செய்வதாய், செல்வங்களையெல்லாம் அளிப்பதாய்,உலகையே வசப்படுத்துவதாய், ஸம்ஸாரத்தை உடனே தாண்டுவிப்பாயிருப்பது த்வயமந்திரம். அறிவிலியானுலும், அறவழி நிற்பவனுயிலும், இகழப்படுபவனுயினும் புகழப்படுபவனுயினும், எந்த மனிதனும் த்வயோச்சாரணமாத்திரத்தாலே பூஜிக்கத்தக்கவனுகிறுனே, மனம் மொழி, மெய் என்னும் முக்கரணங்களாலும் செய்யப்பட்ட பாபங்களும் ''தீயினிற் தூசாகிப் போமோ'' அவ்வளவு பெருமைமிக்க, மங்களமான த்வய மந்திரத்தை ஸ்த்ரீயாலுலும், புருஷனுலும், ஆசார்யனை வணங்கி தவயந்தை லபித்து அதிலேயே ஊன்றியிருநதும், மேலும் பரமபதத்தில் வழங்குவதும், எல்லா சித்திகளையும் அளிப்பதும், முமுக்ஷுக்களுக்கு எப்பொழுதும ஜபிக்கத்தக்கதும், ஜபிப்பவர்களுக்கு பக்தியையும அறிவையும், வளர்ப்பதுமான அஷ்டாக்ஷர மந்திரத்தை, ஜபித்துக்கொண்டும், [இத்திருவஷ்டாக்ஷர மந்த்ரம் எம்பெருமானுக்கு எப்போதும் இனி

யது. எந்த இடத்தில் உட்கார்ந்திருந்தாலும், சயனித்திருந்தாலும், நின்று கொண்டிருந்தாலும், அஷ்டாக்ஷர மந்திரத்தை ஜபிக்கக்கடவன். இதை ஜபிப்பவனிடம் பரம புருஷன் உகக்கிறுன். ப்ரம்மஹத்தி செய்தவனுயினும், செய்நன்றி கொன்றவனுயியினும், மஹா பாதகம் செய்தவனுயினும, அவன் அஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தை ஜபம் செய்பவனைக் கண்ட மாதரததில், அப்பாபஙகளிலிருந்து விடுபடுகின்ருன். அஷ்டாக்ஷரத்தை ஜபிக்கும் பாகவதோத்தமர்கள், தேவர், அஸுரர், மனிதர் முதலிய ஜீவ ராசிகளோடு கூடிய எல்லா வுலகங்களேயும் பரிசுத்தப்படுத்துகினறனர். அஷடாக்ஷரத்தை ஜபிப்பவனே எவன ஒருவன் வணங்குகிருனே அவன் எல்லாப் பாபங்களிலிருந்தும விடுபட்டு விஷ்ணு லோகத்தில் விளங்குவான். வைஷ்ணவனலலாத ஆசார்யனிடமிருந்து, இம்மந்திரததை அடைபவன், ஆயிரங்கோடி கல்ப காலங்கள் நரக நெருப்பில் எரிக்கப் படுவான். சகராங்கனமில்லாத அந்த ணனுக்கு எவன் இம்மநதிரத்தை உபதேசிககிருனே, அவன் ரெளரவ நரகத்தை அடைநது அதற்குப்பின் சண்டாள ஜாதியில் பிறககிருன. இமமநதிரத்தினபெருமை அளவிட்டு நினேககவும் ஒணணுதது; ஸ்ரீரஙகனுதனுன பெருமானுடைய நெஞ்சுககு இனியது. இம்மநதிரம் மனிதாகளுக்கு எல்லாப் பலன்களேயும் அளிககவல்லது] பாகவதோத்தமர்களாய், ஆசார்ய பரேமையோடு கூடியவனுய், பகவத பாகவதாசாாய கைஙகர்ய ஸ்வரூப நிஷடாகளாக விளங்க வேணடும''.

ஸ்ரீவைஷணவர்களில பெரும் பாலானேர்க்கு தங்கள் ஆசார்யனேயே அறியாமல சம்ஸாரமாகிய கடலில் சிககுணடு, கரையேற வழி தெரியாமல் தவிக்கினறனா.

ஸ்ரீவைஷ்ணவர்களில் இன்னும் சில பகுதியினர் தங்கள், தங்கள் ஆசார்யனே தெரிந்திருந்தும், இன்னும் ஆசார்யனே அணுகி ''பஞ்ச ஸம்ஸ்காரம்'' செய்து கொள்ளாமலே, ''இருள்தருமா ஞாலததே'' வாணுளே வீணுக்கிக்கொண்டு இருக்கின்றனர். இவர்களெல்லாம் தஙகள் தவறுகளே உணர்ந்து, இதுநாள்வரை பஞ்ச ஸம்ஸ்காரம் செய்து கொள்ளாதவர்கள். இனியாவது 'பஞ்ச ஸம்ஸ்காரம' செய்து கொள்வதன் அவசியத்தை உணாந்து, ''இதுநாள் வரை ஆசார்ய சமபந்தம் இல்லாத வாகளாய இருந்தாலும், இனிமேலாவது ''ஆசார்யன் சிச்சன் ஆருயிரைப பேணுமவன, தேசாரும் சிச்சன அவன் சீர் வடிவை'' என்றபடிக்கே ஆசார்ய, சிஷ்ய உறவுகளே வலுப்படுத்திக்கொண்டு, எம்பெருமானை நம்பெருமாளின் திருவுள்ளத்திற்கும், எந்த ப்ரபாவமுடைய, 'திருமநத்ரோபதேசம்' பெற திருக்கோட்டியூருககு பெரிய நம்பிகளிடம், பதினெட்டு முறை அலேந்து, கடைசியில் வெற்றிகண்டு, தான் பெற்ற திருமந்த்ரததை, உலகோரெல்லாம் உய்ய வேணடும் என்ற மனத்தினராய், அல்லலுறும் மககளும உய்ய வேணடும், இஃதோடல்லாமல், இனி வருங்கால மககளும, அல்லலினினறும நீங்கி உயவு பெற வேணடும-எனறு பகவானின் திருவுளளத்தையும், ஸ்ரீஆளவநதாரின் திருவுள்ளததையும், 'மனத்துட்கொணடு'' பெறுவதற்கு அரிதானதும, பலமுறை முயன்று லபித்ததும் ஆன திருமநத்ரததினே ஆசார்யனின் நிபநதனேயையும் மீறி, திடமான சங்கல்பத்தோடு கூடினவராய், கோபுரத்தின் மீதேறி, பரக்க உபதேசித்தருளிஞரோ அந்த பகவத் ராமானுஜரின் திருவுள்ளத்திற்கும், இன்னும் பல மகான்கள், ஆசார்ய புருஷர்கள் முக்கியமாக 'அமிருத சுவாதினி' என்கிற திவ்விய பாசுரங்களில் 'பஞ்ச ஸம்ஸ்காரமும், அதனுடன் லபிக்கப்படும், திருவஷ்டாக்ஷர, துவய, சரமஸ்லோகங்களின் பெருமையை மக்கள் உணர வேண்டி மிகுந்த வாத்ஸல்யததுடன், எடுத்துரைத்த ஸ்ரீஸ்வாமி தேசிகன் திருவுள்ளப்படிக்கும், மேற்படி மகான்கள, ஆசார்ய புருஷர்கள் எவ்வளவு பாடுபட்டு, அல்பக்ஞர்களாகிய மககள் எல்லோருமே உய்யவேண்டும் என்று ஆழ்ந்த கனவுடன் தீர்க்க தரிசிகளாய், நாமெல்லோரும் உய்ய வேணடி சங்கலபித்து பல வழிகளிலும் 'பஞ்ச ஸம்ஸ்காரம' செய்து கொள்வதன பெருமையை உணர்ததினுர்களோ அவைகளின் பெருமைகளே உணர்ந்து, மகான்களின் ஆசாரயனே அண்டி பஞ்ச ஸம்ஸ்காரம் செய்துகொண்டு, 'ராமாநுஜார்ய திவ்யாக்ஞா வர்த்ததாமபிவாத்ததாம்' எனனும் படிக்கு, அவரது கனவுகளே நனவுகளாக்கி 'ஸ்ரீவைஷ்ணவ (கைங்கர்ய) ஸ்ரீ'யை, வர்த்ததாம் அபிவாத்ததாம எனறு அபிவிருத்திககச செய்து, ஆழ்வாராசாாயாகள காட்டிய வழியை பரம ப்ரயோஜனமாகப்பறறி அவ்வழி நின்று, வைணவம் அழிந்து வரும் தற்போதைய நாளில், அதை அழியா வணணம காபபதே, குறிககோளாகக்கொணடு, பல்லாணடு, பலலாணடு பல்லாயிரததாணடு, வாழ்வாஙகு வாழநது பகவத் பாகவதாசாாய கைங்கர்ய நிஷ்டர்களாய, இருகலேயாகளும் ஒற்றுமையோடு வாழ்வதே ஸ்ரீவைஷ்ணவ சொரூப லக்ஷணம் என்பது பல ஆசாாய, மகான்கள் கண்ட உண்மை.



# ஸ்ரீ சீதாராம ஜனனம்-இரகசியார்த்தம்

உலகத்திலுள்ள பொருள்களுக்கு ஸ்தூலம், சூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று நிலைகள் உண்டு. பனிக்கட்டி உருகி ஜலமாகி, ஜலம் பொங்கி நீராவியாக மாறுகிறது. இது போலவே மானிட சரீரம், பிராணன், ஆன்மா ஆகிய மூன்றும் ஜீவனின் மூவ்வித நிலைகளைக் கொண்டு குறிப்பிடலாம். சரீரம் பௌதிக தாதுக்களைக் கொணடது; பிராணன் திவ்ய தேஜோமய சக்தி வாய்ந்தது; ஆனமா பரமான்ம சொரூபமானது. இவ்வாறு உலக வஸ்துக்களை, செயல்களைப் புரிந்து கொள்வதை அதிபௌதிக, அதிதைவிக, அத்யாத்மிக நோக்குகள் என்பர். நம் நாட்டில் ரிஷிகளும் முனிவர்களும் அருளிய கிரந்தங்கள் யாவும் இம்முவ்வகை நோக்குடன் தான் படைக்கப்பட்டுள்ளன. அத்தகைய படைப்பில் ஸ்ரீ வால்மீகி முனிவரின் ஸ்ரீமத்இராமாயணமும் ஒன்று. அதன்படி முதலில் இங்கு ஸ்ரீராம ஜனனம் பற்றிய விளக்கம் பெற முயல்வோம்.



கோசல நாடடிற்கு அயோத்யாபுரி தலைநகர். அதில் தசரத மன்னர் அரசாண்டு வந்தார். அவருக்கு கௌஸல்யா, கைகேயி, சுமித்ரா என மூன்று மனைவியர்கள். இவர்கள் மூலம் மன்னருக்கு இராமர், பரதர், லக்ஷ்மண-சத்ருக்னர் என்ற நான்கு குமாரர்கள் பிறவி எய்தினர். இது தான் பௌதிக நிலையில் இராம ஜனன வரலாறு.

எண்ணாயிரம் ஆண்டுகளுக்கு முன் நடந்தேறிய இச்சம்பவத்தை நாம் இன்றும் கொண்டாடுகிறோம் (மனதில் கொண்டு சரீர செயலால் ஆடிப் பாடுகிறோம்) என்றால் இதில் அத்யாத்ம இரகசியம் மறைந்து நிற்பதே காரணமாகும். 'மறை' என்றால் 'வேதம்'. ஏனெனில் அதில் ஆன்மீக தத்துவங்கள் மறைந்து நிற்கின்றன.

திரு. வி. ஆர். ஸ்கந்தநாராயணன்,
கொச்சி.

அதை உணரவே வேத அத்யயனம். ஆகவே இராமாயண அத்யயனமும் வேத அத்யயனமாக விளங்குகிறது.

வேதவேத்யே பரே புமஸி ஜாதே
தசராத்மஜே ।
வேத: ப்ராசேதஸாதாசித் ஸாக்ஷாத்
இராமாயணாத்மனா ॥

என்ற சுலோகப்படி, வேத புருஷன், பரம்பொருள், தசரத இராமனாக அவதரித்த பொழுது அந்த வேதமும் இராமாயணமாக உருவெடுத்தது.

ஆகவே ஸ்ரீமத் இராமாயணத்தில் வர்ணிக்கப்பட்டுள்ள எல்லா சம்பவங்களும் மானிட ஜீவனுக்கு வழி காட்டும் அத்யாத்ம தத்வ இரகசியங்களை உள்ளடக்கியதாகவே உளது எனலாம். இதற்கு உதாரணமாகவே இராம ஜனனத்தின் உட்கருத்து இங்குக் கூறப்படுகிறது.

'தசரதர்' என்ற சொல்லில் உள்ள 'தச', 'ரத' என்ற பதங்களுக்கு 'பக்ஷி வாகனர்' என்ற பொருள் உண்டு.பக்ஷிக்கு இறக்கைகள் இரண்டு. இங்கு அவை பக்தி மார்க்கத்தையும், கர்ம மார்க்கத்தையும் குறிப்பவை. 'ஞானம்' என்ற பேரறிவு இவ்விரு மார்க்கங்களால் பிரமபொருளை நாடும். அப்பேரறிவாகிய 'பிரமம ஞானம்' மேலிட்ட அந்தஹ்கரணங் களைப் படைத்த ஜீவானமாவே தசரத மன்னன்;கோசல நாட்டதிபன். ஆன் மாவிறகு சரீரம் புணயபூமி. 'குசலம்' எனற நலன்களை அளிப்பது. தெய் வீக சம்பத்துக்கள் நிறைந்தது. ஆகவே தசரதன் சரீரமே கோசல நாடு. உடலை ஆள்வது ஆனமா தானே! இதற்கு அயோத்யாபுரி தலை நகர் ஞான யோகி சரீரத்தின் ஜாக்ரத், ஸ்வப்ன, சுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளை, நிலைகளைத் தாண்டி, நான்காவதாகிய துரீய அவஸ்தையில் செயல்படுவான். இந் நிலை சிரஸின் ஸஹஸ்ரார கமல சக் கரத்தில், ஆதாரத்தில் வெளிப்படு வது. அந்தஹ்கரணங்களான மனம, புத்தி, சித்தம், அஹங்காரம் யாவும் ப்ரம்ம ஞானத்தில் நாட்டம் கொண்டதாகவே இருக்கும்.

சரீரம் உள்ளவரை அதன் முக் குண நிலைகள் - ஸத்வ, ரஜஸ், தமோ குண நிலைகள்-செயல்படத்தான் செயயும. இம்மூன்றும் பரம புருஷ னின் ப்ரக்ருதி சக்திகள். ஆகவே ஞான யோகியான தசரதரும் இநத முவ்வகை சக்திகளுககு உட்பட்ட வராகவே செயலபுரிய வேணடியவ ராகிறார். அதாவது ஞானம் தனது சுத்த ஸதவ நிலை, ரஜோமய ஸதவ நிலை, தமோ குண ஸதவ நிலை என்ற மூனறு நிலைகளில் பிரகாசிக்கத் தொடங்குகிறது. இதைக் குறிப் பதே தசரத மன்னரின் மூன்று மனைவி யர்கள். கௌசல்யா ஸுத்த ஸத்வ ஞான சாக்ஷாத்கார சக்தி சொரூ பிணீ. கைகேயி ரஜோ குண ஸத்வ நிலையின் வ்ருத்தி சகதி ரூபிணீ. சுமித்ரா தமோ குண ஸத்வ வ்ருத்தி சக்தி சொரூபிணீ. இந்த சக்திகளின் சேர்க்கை பெறற பிரமம ஞானம் மேலிட்ட அநதரங்க கரணங்கள் நான்கும் நான்குவித புதிய கிரியா சக்திகளைத் தோற்றுவிக்கின்றன. ஞானம், பக்தி, வைராக்யம,யோகம ஆகியவையே அப்புதிய கிரியா சக்தி கள். ஜீவ ப்ரம்ம ஐக்கியத்திற்காக உழைக்க வலல கரங்கள இவை. பெற்றோரின லட்சியத்தை செயல் படுத்துவது புத்திரர்கள் அல்லவா! ஆகவே தசரத மன்னருக்குப் புதல் வர்களாக அவதரித்த இராமர், பர தன், இலக்குமணர், சதருகனன் இந் நான்கு சக்தி சொரூபஙகளாக விளங கினார். இதுவே ஸ்ரீ ராம ஜனனத்தின் ஆன்மிக இரகசியம. ஞான சக்தி தனிப்பட செயல் புரியாமல் மறற மூன்று சகதிகளுடன் இணைநதே செயலபடுவது. காரியஸிததிக்கு இந்த சதுர் வயூஹம் அவசியமானது. இக்கட்டுரையின் ஸாரம பின்வரு மாறுளது :*

ஸ்ரீராம ஜனனத்திற்கும் ஸ்ரீ ஸீதா ஜனனத்திற்கும் இடையே வித்தியா சம் உணடு. தசரதர் புத்ர காமேஷ்டி நடத்தினார். யக்ஞ புருஷன் பாயச பாத்திரம அருளினார். அதைக் கொணடு கர்ப்ப வாச துக்கம் அனு பவித்து ஸ்ரீராம, லக்ஷ்மண, பரத, சத்ருக்னர் பிறந்தனர். ஆனால் ஸீதையின் தோற்றம அயோனிஜம் என்பர். காபப வாச வேதனைக்கு உட்படாமல் பூமாதேவியின் பிரசாத மாக உதித்தாள். ஜனகரும யாகம செயய யாகபூமியைத் தங்கக் கலப பையால் உழுதார். பூமிக கடியில் இருநத ஒரு பெட்டியில் மூடியது கலப்பை.வெளியே எடுத்துப பெட்டி யைத திறந்தால் பொன் மயமான ஜோதியுடன் கூடிய ஒரு குழநதை புன்முறுவல் பூத்தது. கலப்பையால் உழும்பொழுது மண்ணில் ஏற்படும் சால்பகுதியை (Furrow) 'ஸீதா' என்பர். ஆகவே அதில் அகப்பட்ட பெண மகவும் ஸீதா என்ற பெயர் பெற்றாள். ஜனகா வளர்ப்புப் பெண ஜானகியாக வளர்ந்தாள். பின்னா இப்பாரத பூமியை ஆளவரும் ஸ்ரீராம ருக்கு பூதேவியாக வந்தமைநதாள். இது ஒரு மாயப் பிறவி இதை உதாரணமாகக கொணடே இராவ ணன கவர்ந்த ஸீதையும மாயா ஸீதையே என்றும் கூறுவர். இனி ஸீதாதேவியின் ஜனன மஹிமை பற்றி சில ஆன்மிக இரகசியங்களைக் காண முயலுவோம்.

ஜனக மஹாராஜன யகஞம் செயயத தொடங்கினார். இநத ஜனகர் ஒரு மஹாமுனிவர், தவ யோகி. கணணபிரான தனது கீதை யில் புகழநத மாவீரர் 'ஜனக' எனற ஸமஸ்கருதச சொல்லுக்கு 'உணடு பண்ணுபவர், தோறறுவிப் பவர்' எனப பொருளுண்டு. இதன் படி அவர் தனது தாமோபதேசங களாலும், நித்ய ஆசரணைகளாலும தனது நாட்டு மக்களிடையே ஆன்ம ஞானத்தைத் தோற்றுவித்தார். 'யகஞம' எனற சொல "யேன ஞாயதே இதி யகஞ" என்ற சமரசப் படி பகவத ஸ்வரூபத்தை அறிவிப் பது எதுவோ அது யக்ஞமாகும். சாஸ்திரிக யாகக் கிரியைகள யாவும் ஈசவர ஞானததில் தான முடிவுறும. செயல்களினால ஏறபடும அனுபவ ஞானமே அனுபூதியல்லவா! இநத அனுபூதி நிலைகளை மககளும் அடை யுமபடி செய்தவா ஜனகராவார்.

யகஞம் நடதத யகஞபூமியை கலப்பையால உழுதார். ஞானம பிறக்கும் பூமி நமது அநதஹகரண சகதிகள கொணட இதயப்பிரதேசம். இநதிரியஙகள் பெறும் புலன மனதிடம் சமாப்பிககபபடு கிறது. மனம அவற்றின நித்ய, அநித்ய நிலை களை அலசிப் பார்கக புத்தியிடம அவற்றைச் சமாபபிக்கிறது. அந்த புத்தியின் ஆராய்ச்சியால கிடைத்த

---

| * | | | | | |
|---|---|---|---|---|---|
| த | புத்தி | — கௌசல்யா | — ஸத்வம் | — ஞானம் | — இராமன் |
| ச | மனம | — கைகேயீ | — ரஜஸ் | — பகதி | — பரதன் |
| ர | அஹங்காரம் | சுமித்ரா | — தமஸ் | வைராக்யம் | — லக்ஷ்மணன |
| த | சித்தம் | | | யோகம் | — சத்ருக்னன் |
| ர் | | | | | |

அறிவுகளை சித்தம் இரகசியமாகப் பதிவு செய்து கொள்கிறது. இதுவே சித்திர குப்தனின் டேப் ரிகார்டர். பின்னர் 'நான்' எனக் கூறிக் கொள்ளும் அகங்காரம் அவ்வறிவை இஷ்டம் போல் பிரயோசனப் படுத்திக் கொள்கிறது. இப்படியாக அந்தஹ்கரணங்கள் இதயமாகிய பூமிக்குள் மறைந்துள்ள கிரியா சக்தி களாக உள. இவற்றை வெளிப் படுத்தவே ஜனகன் பூமியை உழு தான.

கலப்பையால் உழுவதால் காலி யான பூமியின் மேல் பரப்பில் உள்ள புல், பூண்டுகள், மண்ணாங்கட்டிகள் நீங்கி பெரண்டு பூமி மிருதுத் தன்மை பெறும். அதுபோல யக்ஞ புருஷன் தனது அந்தரங்க ஞானத்தில் உள்ள தேவையற்ற விஷயங்களைக் களைந் தெறிந்தான் இதையே அத்யாத்ம விசாரணை என்பர்.

பூமிக்குள் சுவர்ண மய பெட்டி அகப்பட்டது. அதனுள் ஸீதையும் காணப்பட்டாள்.

ஆன்ம விசாரணையின் பயனாக பிரம்ம ஞானம் பெற ஆதாரமான சுத்த புத்தி சக்தியின் ரஜோ குணப் பிரதான கிரியா சக்தி சாதகனுக்கு ஸ்பூரிக்கிறது. அது ஒரு சுவர்ணமய பொக்கிஷமாகும். அந்தக் கிரியா சக்தியில்தான் மோக்ஷ நிலையை அடைவிக்கும் ஞானசக்தி பிரசாந்த நிலையுடன் காக்ஷியளிக்கும்; ஆகவே ஸீதாதேவி ப்ரம்ம ஞானத்தை செயல்படுத்துவதால் பிறக்கும் சாந்த நிலையின் உருவாக விளங்குகிறாள்.

ஸ்ரீ ராமர் அந்தஹ்கரணத்தில தோன்றிய ஞான சொரூபி என்றால் ஸ்ரீ ஸீதாதேவி அதற்குத் துணை புரி யும, ஸஹதர்மிணியாகச் செயல படும, சாந்த நிலையின் உருத் தோற் றமே யாவாள். இந்த சாந்த நிலையை நாம் நமது சொந்த முயற்சியால தோற்றுவிக்க முடியாது. பிரம்ம ஞான நிலை செயல்படும் பொழுது சாந்தம் தானாகவே தோற்றம் பெறும். இதைக் குறிக்கவே ஸீதை யின் ஜனனமும் அயோனிஜமாகக் கூறப்பட்டுள்ளது. ஜனகர் போன்ற முனிவர்களுக்கு ஸீதை போன்ற சாந்திவிலாசம் ஸஹஜமாக ஏற்படு கிறது என்பதே ஸீதா ஜனனத்தின் அத்யாத்ம இரகசியமாகும். ★

# கிருஷ்ணாவதாரத்தின் பெருமை

**(இறையன்பன்)**

ஸ்ரீமந் நாராயணனின் சங்கு :- பாஞ்ச ஜன்யம் - பொய்கை ஆழ்வார் திரு அவதாரம்.

| | | |
|---|---|---|
| கதாயுதம்—கௌமேதகி | —பூதத்தாழ்வார் திரு அவதாரம். | |
| வாள —நாந்தகம | —பேயாழ்வார | ,, |
| சக்கரம்—சுதர்ஸனம் | —திருமழிசையாழ்வார் | ,, |
| கௌஸ்துபாமசம் | —குலசேகராழ்வார் | ,, |
| கருடாழ்வார் | — பெரியாழ்வார் | ,, |
| பூமாதேவி | — ஸ்ரீ ஆண்டாள் | ,, |
| ஸ்ரீவத்ஸாமசம் | — திருப்பாணாழ்வார் | ,, |
| ஸ்ரீ கார்முகாம்சம் | — திருமங்கை ஆழ்வார் | ,, |
| பகவான் | — நம்மாழ்வார் | ,, |
| ஆதிசேஷன் | — இராமானுஜர் | ,, |

மகாபாரதத்தில் பரதத்துவத்தைப் போதிக்கும் மூன்று முக்கிய உபதேசங்கள் :

1) ரஜோகுண அர்ஜுனனுக்கு கண்ணன் அருளிய கீதை.

2) தமோகுண திருதராஷ்டிரனுக்கு ஸநத்ஸுஜாதர் போதித்த ஸநத்ஸுஜாதீயம்

3) சத்வகுண தர்மருக்கு பீஷ்மர் உபதேசித்த விஷ்ணுசகஸ்ரநாமம்.

ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில :—

அதிதிதேவி — தேவகி : பூமிதேவி — யசோதை :
காசிபமகரிஷி — வசுதேவர் : பிரம்மா — நந்தகோபாலன் :

துவாரகை :- இது "பிரம்மரந்திரம்" என்பதாகும். அமிர்த கலசத் தின் நடுவில இருக்கிறதென்றும், சகஸ்ரநாமச் சக்கரத்தை சுழலச் செய்கிறதென்றும் யோகிகள் அறிவர். துவாரகாபதி ஸ்ரீகிருஷ்ணன் என்பதையும் இது விளக்குகிறது.

இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாஹாரம, தியா னம், தாரணை, சமாதி என்னும் அஷ்டாங்க யோகத்தில் ஏழு நிலைகளை யும் கடந்து ஆத்மயோகி, எட்டாவதான சமாதி நிலையான இறை யுணர்வில் திளைக்கிறான் என்பதனைக் காட்டவே ஸ்ரீ கிருஷ்ணன் எட் டாவது குழந்தையாக அவதரித்தார்.

கண்ணன் நீல நிறம் :- வான், கடல், மனிதனுடைய கண்ணின் உட்பகுதி, பாம்பின் விஷம் இவையும் நீலம். மனிதன் VIBGYOR என்ற சப்த ஒளி வட்டத்தினுள் நீலநிறப் பகுதியில் வாழ்கிறான். இதனை விளக் கவே கண்ணன் நீலமேக்யாமளவண்ணனாகக் காட்சியளிக்கிறான்.

பரமாத்ம சொரூபியான ஸ்ரீ கிருஷ்ணன் பஞ்ச பூதங்களையும் (அப்பு, வாயு, தேயு, பிருதிவி, ஆகாசம்) அடக்கி ஆண்டு சர்வ வியாபியாய் திகழ்கிறான் என்பதை விளக்கவே 5 தலைப் பாம்பின் மீது நர்த்தனம் செய்கிறான். இது காளிங்க நர்த்தனம்.

வெண்ணெய் திருடுவது :- கண்ணன் இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி என்னும் குழந்தைகள் மேலேறி, ஆணவம், கன்மம், மாயை, என்ற மூன்று உரிகளின் மேலுள்ள 'மனம்' என்ற உரியிலிருந்து 'பக்தி' என்ற எண்ணமான வெண்ணெயை உட்கொள்கிறார். இதுவே ஜீவ பிரம்ம ஐக்கிய நிலை.

ஆலிலையில் ஸ்ரீ கிருஷ்ணர் :- மனமாகிய ஹ்ருதய ஸ்தானத்தில் பகவான் பள்ளிகொண்டிருக்கிறான் என்பதை விளக்குகிறது.

முரளி கானம் :- புல்லாங்குழல் என்பது மனித உடல். ஆறு துளைகள் ஆறு ஆதாரங்கள், ஆத்மா என்ற காற்றை ஆறு ஆதாரங்களைக் கொண்ட புல்லாங்குழலால் பரமாத்மா ஸ்ரீ கண்ணன் இசைக்கிறார். ஜீவ பிரம்ம ஐக்கிய பரவசத்தினால இசையில் அனைத்து ஜீவன்களும லயித்தன

